# Ūl̲iyan̲

Malar 12, ital̲ 3

October 06, 1931

Record no. 148

சென்னைப் பதிவு எண் கருமக \ கசு பக்கங்கள் விலை அணு 0-1-6 தந்தி விலாசம்:—“ஊழியன்”

சந்தா விபரம்.
வருடச் சந்தா ... ௩—0—0
ஆறுமாதச் சந்தா ... ௧—0—0
வெளிநாடு வருடச்சந்தா ... ௪—0—0

# ஊழியன்.

விளம்பர விகிதம்.
அங்குலம் ௧-க்கு வாரம் ௧-க்கு 0—௪—0
கிறிமன்ற விளம்பரம் அங். ௧-க்கு ௧—0—0
இப்பத்திரிக்கு விளம்பர விகிதத்திற்கு எழுதவும்.

## The "Oolian," a Nationalist Weekly.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

நல்லவை வாழ்க! அல்லவை ஆழ்க!

மலர். கஉ. } காரைக்குடி, பிரசோற்பத்தி-ஞூ புரட்டாசி-மீ ௨௦-உ செவ்வாய்க்கிழமை. { இதழ் கூ

சென்ற வாரத்தில் நடைபெற்ற நா. புதூர் பாரதி பள்ளிக்கூட முதலாவதாண்டு விழாவில் தலைமை வகித்த "ஊழியன்" ஆசிரியர் திருவாளர் ராய. சொக்கலிங்கன் அவர்கள் நிகழ்த்திய முடிவுரையில் முக்கியப் பகுதி வருமாறு (ந. கி.):—

தேசியக் கல்வியின் அவசியம்பற்றி அன்பர் திருகூடசுந்தரனார் பேசினார்கள். சாதாரணமாக, ஒவ்வொரு பாடசாலையிலும் ஆசிரியர் என்ன சொல்லிக் கொடுக்கிறார்களோ அதனையே மாணவர்கள் சொல்லுவார்கள். ஆசிரியர் நல்ல முறையில் பயிற்சி யளித்தால் நல்ல பழக்க வழக்கமும் அறிவும் பெற்று மாணவர்கள் விளங்குவார்கள். எனவே, குழந்தைப் பருவத்திலிருந்தே சிறுவர்களைக் கல்வி பயிலும் பொருட்டு பெற்றோர்கள் நல்லாசிரியர்களிடம் அனுப்புதல் வேண்டும். அவ்வாறு செய்வதால் குழந்தைகள் நற்பயிற்சி பெற்று நல்லோராக வருவதோடு பெற்றோர்கள் அதனால் நன்மையுமடைவர்.

* * *

இன்றைய நாளில் பல ஆங்கிலப் பள்ளிக்கூடங்கள் அங்கங்கே பெரிய கட்டிடங்களில் நடைபெற்று வருகின்றன. இவற்றுள் போதிக்கப்படுவது ராஜ பக்தி. அங்கு தேசபக்தியே கூடாதென்று தடுக்கவும்படுகின்றது. முற்காலத்தில் அரசரைக் காண்பது திருமாலைக் காண்பதற்குச் சமானம் என்று எண்ணியிருந்தார்கள். அக்காலத்தில் தேச பக்தி வேறு, ராஜ பக்தி வேறு என்றிருக்கவில்லை; ஆனால் இன்றைய ராஜபக்தியானது தேச பக்தி கூடாதென்று புகட்டக் கூடிய நிலைமையிலிருப்பதால் தான் நாம் ராஜ பக்தி வேண்டாம் தேச பக்தியே வேண்டும் என்று சொல்லவேண்டியதிருக்கிறது. எனவே, தற்கால முறைப்படி பார்த்தால் ஒருவன் தேசபக்தி யுடையவனாகவிருந்தால் அவனுக்கு ராஜ பக்தி கூடாது என்று கூறவேண்டியதிருக்கிறது.

* * *

இனி, தாய் மொழியாகிய தமிழ் மொழியை எடுத்துக் கொண்டால் அது பெரும்பாலும் புறக்கணிக்கப் பட்டிருப்பதால், இன்றை நாளில் 'தமிழின் பெருமை'யை விளக்கும் விரிவுரைகள் நிகழ்த்த வேண்டும் நிலைமையில் நாம் இருக்கின்றோம். தமிழ் மொழி சிறப்புடைத்து என்பதற்கு இம்மொழியிலுள்ள சிறந்த நூற்களே போதிய சான்றாக விருக்கின்றன. சமீபத்தில் நம்மிடையே தோன்றிய பாரதியாருக்கு நிகரான பெரும் கவி எங்கும் தோன்றியதில்லை என்றே கூறலாம்.

## மலர் மணம்.

### பாரதியார் பாடல்.

காலஞ் சென்ற சுப்பிரமண்ய பாரதியார் சில தமிழ்ப் புலவர்களைப் போன்று யாப்பு, அணி இலக்கணங்களைப் பயின்று பின்னர் ஒவ்வொன்றும் பிரயோகங்கள் இருக்கின்றனவாவென்று பார்த்துக் கவி பாடவில்லை. அவர் நாம் வியாசங்கள் எவ்வாறு எழுதுகின்றோமோ அவ்வாறே அவர் கவிகளை எழுதிக் குவித்திருக்கிறார். இதனை நான் நேரில் பார்த்திருக்கிறேன். இவ்வூர் ஹிந்து மதாபிமான சங்கத்தைப்பற்றி ஓர் பாட்டுப் பாடக் கேட்டுக்கொண்டபொழுது காகிதமும் பென்சிலும்எடுத்துச் சிறிதும் யோசிக்காமல் அவர்கள பெரும் வேகமாக ஓர் கடிதம் எழுதுவது போல் எழுதிச் சென்றார். இத்தகையோர்களே அருட்கவி எனப்படுவோர்.

* * *

பாரதியார் பாடல்கள் பெரும்பாலும் வீரச் சுவை நிரம்பியன. ஆனால் அவர் காதல் நிரம்பிய பாடல்களும் ஏராளமாகப் பாடியே இருக்கின்றார். 'ஞான ரதம்' என்று அவர் எழுதிய நூலினிடையே

"விழியேறு சார்பிலுற உடல்வெந்தோன்
ஒன்றுரையா திருப்ப—ஆலி
முடியேறி மோதயதென்று அருள்முகிலை
சுடுஞ்சொற்கள் மொழிவான்போல
கடியேறு மலர்ப்பந்து மோதயதென்று
இனியாளைக் காய்கின்றானல்
வடியேறு வேலென வெவ்விழியேறி
எலனுவி வருந்தல் காணேன்."

என்று ஓர் பாட்டிருக்கின்றது. அந்நூலில் தெய்வலோகம கந்தர்வலோகம் முதலிய பல லோகங்களைக் குறிக்கும் பாரதியார், தெய்வ லோகமதல் ஓர் பந்தாட்டம் நடைபெறுவதைக் குறிப்பிடுகின்றார். அங்கே பூலோகத்திலிருந்து சென்ற ஓர் மனிதன் இருந்து பந்தாட்டத்தைக் கவனித்துக்கொண் டிருக்கின்றான். ஆடவர்கள் பெண்டிர்கள் எல்லோரும் கலந்து மிக மகிழ்ச்சியாகப் பந்தாடுகின்றார்கள். பந்தாடும் பெண்களிடையே வுள்ள ஒரு மாதை, அங்கே பார்த்துக் கொண்டிருந்த மனிதன் காதலிக்கின்றான். எனவே அவளையே பார்த்த வண்ணமாக அந்த மனிதன் இருக்கின்றான். அப்பொழுது அந்தப்பெண் எறிந்த பந்தானது பந்தாடும் ஒருவன் மீது பட்டுவிடுகிறது. உடனே அவன் அந்த மங்கையைக் கோபித்துக் கொள்ளுகிறான். இதனைக் கண்ட மனிதன் பெரும் வருத்தங்கொண்டு இந்தக் கவியைச் சொல்லுகிறான். அந்த இனிய மங்கையின் கூரிய வாள்போன்ற விழிகளால் நான் ஆவி வருந்திக்கொண்டிருக்கிறேன். எனினும் நான் அதற்காகக் கோபித்துக்கொள்ளவில்லை. ஓர் மலர்ப்பந்து மேனியில் வந்து மோதிக்கொண்டதற்காக இவன் பெரும் கோபம் கொள்ளுகிறானே என்று அவன் வருந்துகிறான்.

* * *

இன்னும் குயில்பாட்டு, கண்ணன்பாட்டு போன்ற பாடல்கள் காதற் சுவை நிரம்பியதாக விருக்கின்றன. சில பாடல்களில் மென்மையும் வன்மையும் ஒருங்கே அமைக்கப்பட்டிருக்கின்றன. பாரதியார் பாடிய வேலன் பாட்டில்,

"கிள்ளைமொழிச் சிறுவள்ளியெனும்
பெயர்ச் செல்வத்தை—என்றும்
கேட்டற வாழ்வினை யின்பவிளக்கை
மருவிடுவாய்"

என்று கிள்ளை மொழிபோன்ற வள்ளியை மணந்து கொண்டான் எனக்கூறுமிடத்திற்கு மிக இனிமையான மெல்லிய சொற்களை உபயோகித்திருக்கின்றார். இனி அடுத்த வரியைப் பாருங்கள்.

கொள்ளை கொண்டே அமராவதி வாழ்வு
குலைத்தவன்—பானு
கோபன் தலை பத்துக்கோடி துணுக்குறக்
கோபித்தாய்"

என்ற பாடலில் வீரம் ததும்பியிருக்கின்றது. பானுகோபன் எனும் கொடிய அரக்கனின் தலை துணுக்குறும்படி செய்தான் என்பதைக் குறிக்குமிடத்து வன்சொற்கள் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன.

இனி, மனிதனுக்குக் கவலை என்பது இருத்தலாகாது என்று மிக அழுத்தமாக பாரதியார் கூறுகின்றார். "மனத்திற்குக் கட்டளை" என்று கூறும் பாட்டில்,

"சென்றதினி மீளாது, மூடரே! நீர்
எப்போதும் சென்றதையே
[சிந்தை செய்து
கொன்றழிக்கும் கவலை எனும்
[குழியில் வீழ்ந்து
குமையாதீர்! சென்றதனைக்
[குறித்தல் வேண்டாம்
இன்று புதிதாய்ப் பிறந்தோம்
[என்று நீவிர்
எண்ணமதைத் திண்ணமுற
[இசைத்துக்கொண்டு
தின்று விளையாடி யின்புற்
[றிருந்து வாழ்வீர்;
தீமையெலாம் அழிந்துபோம்
[திரும்பி வாரா.

என்று குறிக்கின்றார். சென்ற காலத்தைச் சிந்தித்து கவலைப்படுவதால் பயனில்லை அக்கவலையானது நம்மைக் கொன்றழிக்கும் தன்மையது. ஆதலால், இன்றே நாம் புத்துயிர் பெற்றிருக்கின்றோம் என்ற எண்ணத்தோடு மிக ஊக்கமாக உழைத்தல் வேண்டும் என்பதை வற்புறுத்துகின்றார்.

* * *

பெண்கள் சமத்துவத்தைக் குறிக்குங்கால் பாரதியார்,

"மாதர் தம்மை இழிவு செய்யும்
மடமையைக் கொளுத்துவோம்
வைய வாழ்வு தன்னிலெந்த
வகையிலும் நமக்குளே
தாதரென்ற நிலைமை மாறி
ஆண்களோடு பெண்களும்
சரி, நிகர், சமானமாக
வாழ்வ மிந்த நாட்டிலே"

என்றுரைக்கின்றார்.

சரி, நிகர், சமானம் எனும் ஒரே பொருள் கொண்ட மூன்று சொற்கள் கையாண்டிருப்பதிலிருந்து அவர் ஆண், பெண், இருபாலாரிடையே எத்தகைய வேற்றுமையும் கற்பித்தலாகாதென்று வற்புறுத்துவது புலனாகும்.

"பெண்ணுக்கு நீர் விடுதலை யில்லை
என்றால்"
... ... ... ...
பின்னிந்த உலகினிலே
வாழ்க்கை இல்லை"

என்ற பாட்டைப் பாருங்கள். இந்த உலகில் ஆடவர்கள் இன்ப வாழ்க்கை பெற்று

(அடுத்த பக்கம் பார்க்க)

## ஓர் கிரகண அதிசயம்.

### மீன்கள் துள்ளியோடின.

### தடியடிக்கும் சாகவில்லை.

மூஸபர்பூரிலிருந்து தென் கிழக்கே ௨௦ மைல் தூரத்திலுள்ள பாவிதபூர் கிராமத்தில் சந்திரக்கிரகணத்தன்று ஒரு அதிசயம் நடந்ததாக ஒரு விவரம் கிடைத்திருக்கிறது. ஆனால் இன்னும் நம்பத்தகுந்தவர்களை விசாரித்து இது ஊர்ஜிதம் செய்யப்படவில்லை.

மேகத்திலிருந்து மீன்கள் விழுந்ததாகவும் மீன்கள் ஆகாயத்தில் பறந்ததாகவும் கேள்விப்பட்டதுண்டு. ஆனால் இப்பொழுது கிடைத்த விவரம் கூறுவதாவது:— சென்ற சந்திரக்கிரகணத்தன்று இரவு ௧௨ மணிக்கு மேல் சந்திரக்கிரகணம் ஆரம்பமானபொழுது சிற்றோடையில் தேங்கிக்கிடந்த ஜலத்திலிருந்து நிறையில் ௫ சேருக்குக் குறையாத பெரிய மீன்களில் ௪௦,௦௦௦ ஐம்பது அடி தூரம் தரையில் நகர்ந்து சென்று பாரிலாகுர் என்ற ௨௫ சதுர மைல் விஸ்தீரணமுள்ள பெரிய ஏரியின் ஜலத்திற்குள் சென்றன.

விசித்திரமான சத்தம் செய்துகொண்டு இவை சென்றன. இதைக்கேட்ட கிராமவாசிகள் தடிகளுடன் இவ்விடத்திற்குச் சென்றனர். அவர்கள் தங்களது ஆச்சரியம் நீங்கியதும் தரையில் நகர்ந்து சென்ற மீன்களைத் தடியால் அடித்தனர். ஆனால் அடி எவ்வளவுக் கெவ்வளவு பலமாக விழுந்தனவோ அவ்வளவுக் கவ்வளவு அடியை மீன்கள் அதிகமாக விரும்பினவாம். ஆனால், தடியடியால் பலனெதவும் ஏற்படவில்லை. தங்களுக்கு ஏற்பட்ட தடையையும் இலட்சியம் செய்யாமல் மீன்கள் ஏரிக்குள் சென்று விட்டன. தரையில் காயம்பட்டு அல்லது இறந்துபோன மீன்கள் எதுவுமில்லை. ஆனால் மறுநாட் காலை தரையில் எல்லாம் மீன்கள் சென்றதுபோல் திட்டமான தடங்களிருந்தன.

இந்த ஜில்லாவிலுள்ள மிக்க வயதான செம்படவர்கள் கூட மீன்கள் இம்மாதிரி ஓரிடம் விட்டு வேறிடம் சென்றதைத் தாங்கள் பார்க்கவில்லை என்று கூறுகின்றார்கள். இந்த அதிசயத்தைப்பற்றியே எங்கும் பேச்சாக இருக்கிறது என்று மேற்கண்ட விருத்தாந்தத்தை எழுதிய நிருபர் குறிப்பிடுகின்றார்.

---

(முதல் பக்கத் தொடர்ச்சி)

வாழ வேண்டுமாயின் அதற்காகவேனும் பெண்களுக்கு அறிவு புகட்ட வேண்டுவது அவசியமாகும். பெண்கள் அறிவில்லாதவர்களாக விருப்பதால் புருஷர்களுக்குத் தான் சிரமம் அதிகம். கற்றறிந்த ஆண்கள் நன்மைக்காகவேனும் பெண்கள் படித்தே ஆகவேண்டும்.

* * *

தேசியப் பாடசாலைகள் எதுவும் சிறப்பாகச் சொல்லத் தக்கவாறு இல்லை என்று திரு. கருப்பன் செட்டியார் குறிப்பிட்டார். அது உண்மை தான். பாருங்கள்! இப் பாடசாலைகள் பெரும்பாலும் தட்டிகள் வைத்த சிற்றுக் கொட்டகைகளிலேயே நடைபெற்று வருகின்றன. அவர்கள் கூறியவாறு எவ்வளவு லட்ச ரூபாய்கள் கோவில்களுக்காகச் செலவு செய்யப்படுகின்றன. அவற்றுள் ஒரு பகுதியாவது தேசியக் கல்விக்காக உபயோகிக்கக் கூடாதா?

* * *

பாரதியார் அன்னச் சத்திரம் ஆயிரம் கட்டுவதிலும், ஆலயம் பதினாயிரம் நாட்டுவதிலும் ஓர் ஏழைக்கு எழுத்தறிவித்தலே சிறந்த தருமம் என்கின்றார்.

* * *

எனவே, சிறந்த முறையில் நாட்டிற்கு நன்மை பயக்கின்ற கல்வி யளிக்கும் தேசியப் பாடசாலைகளைச் செவ்விய முறையில் அமைக்க வேண்டுவது மிகவும் அவசியமாகும். இதற்கென இங்கு வந்திருக்கும் அன்பர்கள் முயற்சிக்க வேண்டுகிறேன்.

---

# தங்க ஏற்றுமதி.

### தடுக்க உத்தேசமுண்டா?

### நிதிமெம்பர் கையை விரிக்கிறார்.

அக்டோபர்மீ ௩-௨ இந்தியச் சட்டசபையில், நாட்டின் தங்க ஏற்றுமதி சம்பந்தமாகப் பின்வரும் அவசரக் கேள்விகளும் சர்க்கார் பதில்களும் நிகழ்ந்தன:—

திரு. எஸ். ஸி. மித்ரா:—அரசாங்க உத்தியோகஸ்தர்கள் பிராவிடெண்டு பண்டிலிருந்து பெருந்தொகையை வாங்கி ஒரே தவணை செலுத்தும் இன்ஷியூரென்ஸ் பாலிஸிகளை வாங்கிக் கொள்ளுவதன் மூலம் ஸ்டெர்லிங்கை வாங்குகிறார்களா?

ஸர் ஜார்ஜ் ஷுஸ்டர்:—௭-வது அவசரச் சட்டத்திற்குப் பிறகு ஏற்பட்டுள்ள நிலைமையைப்பற்றியே இந்தக் கேள்வி குறிப்பிடுகிறதென்று கருதுகிறேன். இவ்விதமனுக்கள் அரசாங்கத்தின் முடிவுக்கு வரவில்லை.

திரு. தாஸ்:—ஒரே தவணை இன்ஷியூரென்ஸ் பாலிஸிகளை வாங்கிக் கொள்ளுவதற்காகச் செப்டம்பர் மாதம் ௨௧-தேதிக்கு முன் அரசாங்க உத்தியோகஸ்தர்கள் எவ்வளவு தொகையைச் சகஜமாக வாங்கிக்கொள்ளுவது வழக்கம்?

ப:—அது சம்பந்தமான புள்ளி விவரம் என்னிடமில்லை.

திரு. ஷண்முகம் செட்டியார்:—செப்டம்பர் ௨௧-ம் தேதிக்குப் பிறகு தனிப்பட்ட நபர்களால் எவ்வளவு மதிப்புள்ள தங்கக் கட்டிகள் ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கின்றன? அவர்கள் தேசத்திலிருந்து தங்கத்தை ஏற்றுமதி செய்வதைத் தடுக்க அரசாங்கத் உத்தேசித்திருக்கிறார்களா? அரசாங்கத்தார் நாணயச் செலாவணி அதிகாரிகள் என்ற முறையில் ஸ்டெர்லிங் மதிப்புக்கு அநேகமாகச் சரியாக இருக்கக்கூடிய விலைக்குத் தங்கத்தை வாங்க உத்தேசித்திருக்கிறார்களா?

ப:—சென்ற செவ்வாய்க்கிழமை வரை ௩௫௦ லட்சம் பெறுமான தங்கம் ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கிறது. பிந்திய இரண்டு கேள்விகளும் குறிப்பிடும் விஷயம் அரசாங்கத்தின் ஆலோசனையிலிருந்து வருகிறது. அவ்வளவுதான் நான் இப்பொழுது சொல்ல முடியும்.

திரு. செட்டியார்:—தங்கத்தை ஏற்றுமதி செய்பவர்கள் நாணயத்தையே விரும்புவதால் செலாவணி அதிகாரி என்ற முறையில் இப்போதைய மார்க்கெட் விலைக்கு தங்கத்தை அரசாங்கத்தார் வாங்கித் தங்க இருப்பை அதிகப்படுத்திக் கொள்ளுவதற்கு இது நல்ல சந்தர்ப்பமல்லவா?

ப:—எனது நண்பர் ஒரு கஷ்டமான கேள்வியைக் கேட்கிறார். தனிப்பட்டவர்களுடைய வியாபாரத்தில் அரசாங்கத்தார் சகஜமாகத் தலையிட விரும்புவதில்லை, இப்போதைய நிலைமையில் அரசாங்கத்தார் தங்கத்தை வாங்கினால் மிகுந்த கஷ்டமான பிரச்சினையை அவர்கள் எழுப்பிவிடுவார்கள். இப்போதைய விலையிலிருந்து வெகுவாக வித்தியாசப்படும் விலைக்குத் தங்கத்தை வாங்க அரசாங்கத்தார் கடமைப்பட்டிருக்கிறார்கள். தனிப்பட்ட நபர்கள் தங்கத்தை ஏற்றுமதி செய்வது தேச நன்மைக்கு விரோதமானதென்று கனம் அங்கத்தினர் நினைக்கிறாரா?

திரு. செட்டியார்:—நாட்டின் பணமான தங்கம வெளிச் செல்லுங்கால், முக்கியமாக இப்பொழுது அரசாங்கத்தின் தங்க இருப்பு மிகக் குறைவாக இருக்கின்றதாகலின். அத்தங்கத்தை அரசாங்கத்தார் வாங்கித் தங்கள் இருப்பை அதிகரித்துக் கொள்ள இச் சந்தர்ப்பத்தை உபயோகப்படுத்திக் கொள்ளுதல் புத்திசாலித்தனமாயிருக்கும் என நான் கருதுகிறேன். இதன் பயனாக, நாணயச் செலாவணி விரிவடையும். அது வியாபார காரியங்களுக்கு முக்கியமாக உதவியாக விருக்கும்.

பதில்:—தாங்கள் சொல்லும் விஷயத்தைப் பூரணமாக நான் ஆலோசிக்கிறேன்.

மிஸ்டர் ஆர்த்தர்மூர்:—தனி மனிதர்களால் இவ்வாறு தங்கம் ஏராளமாக ஏற்றுமதி செய்யப்படுவதைத் தடுத்து உத்திரவுபோடலாமா என்ற ஆலோசனை, தங்களுக்கு இருந்து வருகிறதா?

பதில்:—அதைப்பற்றி நான் ஏற்கனவே பதில் சொல்லிவிட்டேன். முழுவிஷயத்தையும் அரசாங்கத்தார் ஆலோசித்து வருகின்றனர். ஆனால், மிகக் கடுமையான பிரச்சினைகளை இது எழுப்பியிருக்கின்றது.

ஸர் எச். எஸ். கவர்:—ஏழாவது அவசரச் சட்டத்தைப் போடுமுன் அரசாங்கத்தார் இவ்விஷயத்தை யோசிக்கவில்லையோ?

பதில்:—இயல்பாகவே நாங்கள் யோசித்த அம்சங்களில் இதுவுமொன்று தான்.

ஸர் எச். எஸ். கவர்:—யோசனையில் ஏற்பட்ட முடிவு என்ன?

பதில்:—பொறுத்திருந்து என்ன நிகழுகின்றதென்று பார்க்கலாம் என்று நாங்கள் முடிவு செய்தோம். (சிரிப்பு.)

திரு. பி. தாஸ்:—நாணயச் செலாவணியை விரிவு படுத்தித் தங்க ஏற்றுமதியை நிறுத்த, அரசாங்கத்தார் இச்சந்தர்ப்பத்தை உபயோகப் படுத்திக்கொள்ள வேண்டுமென்று இந்திய வர்த்தகச் சபையாரிடமிருந்து தங்களுக்கு விண்ணப்பம் வந்ததா?

பதில்:—அநேக சபையாரிடமிருந்து அரசாங்கத்தாருக்கு விண்ணப்பங்கள் வந்தன. பத்திரிகைச் செய்தி பொன்றின்படி, வர்த்தகச் சங்கத்தின் மிகப் பிரபல உறுப்பினர் ஒருவரே மற்ற யாவரையும்விட மிக அதிகத் தங்கத்தை ஏற்றுமதி செய்து வந்திருக்கிறார். ஆகலால், அவர்களே இவ்விஷயத்தில் ஏதாவது நடவடிக்கை எடுத்துக்கொள்ளல் நலமென நான் யோசனை கூற விரும்புகிறேன். (சிரிப்பு)

திரு. பி. தாஸ்:—அந்தப் பிரபல வர்த்தகச் சங்க உறுப்பினர் ஓர் வியாபாரியுமாவரன்றோ? ஆகையால், வியாபார தோரணையில், லாபந்தரும் எந்த வியாபாரத்தையும் அவர் கைக்கொள்ள வேண்டியதுதானே?

பதில்:—தாங்கள் சொல்லுவதை நான் முற்றும் ஒப்புக்கொள்ளுகிறேன். ஒரு வியாபாரியின் வாழ்க்கையில், தாம் வியாபாரி என்ற தோரணையில் உண்டாகும் நோக்கங்களும் ஓர் இந்தியத் தேசபக்தர் என்ற முறையில் உண்டாகும் நோக்கங்களும் மிக அடிக்கடி முரண்பட்டு விடுகின்றன. (சிரிப்பும் ஆரவாரமும்.)

திரு. தாஸ்:—தங்கம் ஏற்றுமதி செய்யப்படுவதைத் தடுத்து இங்கிலாந்து சர்க்கார் உத்திரவு போட்டிருக்கிறார்களல்லவா? நாமும் இந்தியாவில் அதை யேன் பின்பற்றக்கூடாது?

பதில்:—எனக்குத் தெரிந்த மட்டில் தங்க ஏற்றுமதியைத் தடுத்து இங்கிலாந்து சர்க்கார் உத்திரவு எதுவும் போட்டிருப்பதாகத் தெரியவில்லை.

திரு ஷண்முகம் செட்டியார்:—இந்தியாவில் தங்கத்தை நாணயச் செலாவணி அதிகாரி வாங்கக்கூடிய விலைக்கும் மார்க்கட் விலைக்கும் பெரிய வித்தியாசமிருக்கிறது; அதோடு, தங்கத்தின் இந்திய விலைக்கும் வெளிநாடுகளிலுள்ள விலைக்கும் அவ்வாறே வித்தியாசமிருக்கிறது. ஆகலால், வர்த்தகச் சங்கத்தார் போன்றதோர் உத்தியோகஸ்தரல்லாதோர் சங்கத்தின் முயற்சிகளின் பயனாக, அரசாங்கத்தார் தங்க ஏற்றுமதியைத் தடுக்க உத்திரவு போடுவது போன்ற கண்காணிப்பைக் கைக்கொள்ளுவார்களா?

பதில்:—தனிப்பட்ட எவர் முயற்சியின் பயனாகவும் அரசாங்கத்தார் தங்க ஏற்றுமதியைத் தடுக்கும் உத்திரவைச் செய்யமாட்டார்கள். அத்தகைய உத்திரவு போடுதல் ஓர் கடுமையான நடவடிக்கையாகும். அதைக் கைக்கொள்ளுமுன் அரசாங்கத்தார் மிக ஜாக்கிரதையாக ஆலோசிக்க வேண்டும்.



## புதிய அச்சுச் சட்டம்.

### நிறைவேறி விட்டது.

### "கார்லைலும் குற்றவாளியாவார்!"

சமீபத்தில் இந்தியச் சட்டசபையில் கொணரப்பட்ட புதிய அச்சுச்சட்டம் தனிக் கமிட்டியால் செய்யப்பட்ட சில முக்கியத் திருத்தங்களுடன் மறுபடியும் இரண்டாம் முறை படிக்கப்பட்டு நிறைவேறுவதற்காக, இந்தியச் சட்டசபையில் சென்ற வாரம் பிரரேபிக்கப்பட்டது. ஆறு மணி நேரம் உக்கிரமான விவாதம் நடந்தது. ௧௧௯ திருத்தங்கள் வந்தன. ஆனால் அவற்றில் ஒன்று கூட ஏற்கப்படவில்லை. திருத்தங்களின் மீது ஓட்டுக்கள் எடுக்கப்பட்டபொழுது, வரவரச் சர்க்காருக்கே பெரும்பான்மை அதிகரித்து வந்தது. கடைசி முறை மசோதாவின் மீது ஓட்டு எடுக்கப்பட்டபொழுது எதிர்ப்புக்குப் பதினாறும் சர்க்காருக்கு ௫௧-ம் ஆக ஓட்டுக்கள் கிடைத்தன. எனவே, இரண்டாந்தடவை படிக்கப்பட்டது நிறைவேறி விட்டது. ஏறக்குறைய ௫௦ திருத்தங்கள் பிரரேபிக்கப்படாமலே கைவிடப்பட்டன. அவற்றை அறிவித்திருந்தவர்கள், சர்க்கார் உறுப்பினர் போக்கைக் கண்டே தாங்கள் பிரரேபிக்கவில்லையென்று கூறினார்கள்.

அக்டோபர்-மீ ௩-ந் தேதி மறுபடியும் மசோதா இறுதியாக மூன்றும் முறை படித்துப் பிரரேபிக்கப்பட்டது. அப்பொழுது, எதிர்க்கட்சித் தலைவரான ஸர் எச். எஸ். கவர் மிகப் பலமாகச் சர்க்காரைக் கண்டித்துப் பேசினார். அவர் இம்மசோதாவின் பல்வேறு பிரிவுகளையும் மறுபடியும் படித்து, பிரஞ்சுப் புரட்சி சம்பந்தமாகக் கார்லைலின் பிரசித்தமான "இரும்பும் உதிரமும்" என்ற உபதேசங்கூட இம்மசோதாவின்படி குற்றமாகி விடும் என்று விளக்கியுரைத்தார். மேலும் அவர் கூறியதன் சாராம்சமாவது:— "சர்க்கார் உறுப்பினரைத் தாங்குவதற்கு வேண்டிய மனிதர்கள் இருக்கின்றார்கள். அவர்கள் தங்கள் மனச்சாட்சி என்ன கூறினும் அதற்குக் குருடாயிருக்கிறார்கள். உத்தியோகஸ்தரல்லா உறுப்பினர்கள் ஆஜரில்லாத சமயத்தைச் சர்க்கார் உறுப்பினர் அற்பத் தனத்துடன் பயன்படுத்திக் கொண்டுளார். சட்டசபைக் கூட்டம் கலையப்போகும் சமயத்தில் இம்மசோதாவைப் பிரரேபித்திருக்கிறார்."

திரு ஆர்த்தர்மூர் ('ஸ்டேட்ஸ்மென்' பத்திராசிரியர்) :— அற்பத்தனமாகப் பயன்படுத்திக் கொண்டார் என்ற வார்த்தைகள் பார்லிமெண்டு முறைக்கு ஒத்தவையா?

ஸர் எச். எஸ். கவர்:—'ஸ்டேட்ஸ்மென்' பத்திரிகை இதைவிடக் கடுமையான பாஷையைக் கூட உபயோகப் படுத்துகின்றதே?

தலைவர்:—இச்சபையில் கடின பாஷையை உபயோகிப்பது அதனால் நியாயமாகி விடாது.

திரு. எச். எஸ். கவர் அவ்வார்த்தைகளை வாபீஸ் வாங்கிக் கொண்டு, "சர்க்கார் உத்தியோகஸ்தர் நியாயமல்லாதவாறு பயன்படுத்திக் கொண்டார்" என்று கூறினர்.

சர்க்கார் உறுப்பினர் "முதல் நாளே இதனைப் பிரரேபித்து விட்டேனே" என்று கூறி அதை மறுத்தார்.

இறுதியில் மசோதா ௪௪-ஓட்டுக்களுக்கு எதிரே ௬௩-ஓட்டுக்களால் சட்டமாகி விட்டது.

---



# பர்மாக் கலவரக் காரணம்.

### செட்டியார் மீது பழியா?

### விஷமப் பேச்சுக்குக் கண்டனம்.

#### இந்தியச் சட்டசபையில் பாண்டியன் பேச்சு.

திரு. ராஜாராம் பாண்டியன் இந்தியச் சட்டசபையில் செப்டம்பர்-மீ ௨௪-ந் தேதியன்று பர்மாக் கலவர சம்பந்தமாக ஒரு பிரரேபனை கொண்டுவந்தார். அவர் பர்மாக் கலவரத்தின் காரணத்தைக் கண்டுபிடிக்கவும் அவ்விதம் இனி நேராமலிருக்க வழிகள் கூறவும், கலவரக் காலத்தில் நஷ்டமடைந்தவர்களுக்கு உதவுவதைப்பற்றி யோசனை கூறவும் கமிட்டியொன்று நியமிக்கப்பட வேண்டுமெனத் தமது தீர்மானத்தில் குறிப்பிட்டிருந்தார். அத்தீர்மான சம்பந்தமாக திரு. ராஜாராம் பாண்டியன் செய்த பிரசங்கத்தின் சாராமாவது:—

தற்போது பர்மியர் சிலருக்கிடையே இந்தியருக்கு விரோதமான உணர்ச்சி பர்மாவில் பரவி வருகிறதென்பதை நான் திட்டமாக எடுத்துச்சொல்ல விரும்புகிறேன். இதற்குமுன் இவ்வித உணர்ச்சி அங்கிருந்ததில்லை. இத்தகைய உணர்ச்சியின் பயனாகப் பெரிய கலவரம் ஏற்பட்டு இந்தியாவிலிருந்து அங்குப்போயிருக்கும் விவசாயிகளுக்கும் வர்த்தகர்களுக்கும் பாங்கர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் விசேஷக் கஷ்டம் ஏற்பட்டுவிட்டது. இவர்கள் இதுவரைப் பர்மாவின் ராஜீய வாழ்வில் விசேஷமாகக் கலந்து கொண்டதேயில்லை. ஆகவே பர்மியரோடு அந்நியோன்னியமாக அவர்கள் வியாபாரத்தை நடத்தி வந்தார்கள். பர்மியர்களும் இந்தியர்களைச் சொந்த உறவினர்போல் பாவித்துவந்தார்கள். இவ்வளவு சீக்கிரத்தில் பெரிய மாறுதல் ஏற்பட்டுவிட்டது அதி ஆச்சரியமாக விருக்கிறது.

பர்மியரில் சிலர் சில காலமாக இந்தியாவிலிருந்து பர்மாவைப் பிரித்துவிட வேண்டுமெனக் கிளர்ச்சி செய்து வருகிறார்கள். ஆனால் பர்மியப் பொது ஜனங்களின் பிரதிநிதிகள் அவ்வித அபிப்பிராயம் கொள்ளவில்லையெனத் தெரிகிறது. எப்படியும் பர்மாவைப் பிரிக்கக்கூடாதென்ற அபிப்பிராயமுடையவர்களுமிருக்கின்றனர். சர்வகட்சி மகாநாட்டில் பர்மாப் பிரிவினை விஷயமும் ஆலோசனைக்கு வந்தது. பர்மாப் பிரிவினை விஷயம் ஒருவாறு முடிந்துவிட்டதாகவே கருதப்பட்டது. ஆனால் பிறகு பர்மியப் பொதுஜனங்களும் மகாநாட்டுப் பிரதிநிதிகளில் திரு. சிவராவ் முதலிய சிலரும் பர்மாவைப் பிரிக்க வேண்டுமென ஏக மனதாகக் கோரிக்கை வெளியிடப்படவில்லையென்றும், பொது ஜனங்களைக் கலந்தாலோசித்து இது விஷயமாக ஒரு முடிவு செய்ய வேண்டியது அவசியமென்றும் சொல்லுகிறார்கள். அதன்மேல் பர்மாப் பிரிவினை விஷயம் இப்போது நவம்பர் மாதம் கூடும் பர்மா சர்வகட்சி மகாநாட்டின் ஆலோசனைக்கு விடப்பட்டிருக்கிறது. பர்மாவில் மிகச் செல்வாக்கமைந்த திரு. மாங்மாங்ஜி என்றவர் இதுசம்பந்தமாக இங்கிலாந்துக்குச் சென்றிருக்கிறார். அவர் ஒரு காங்கிரஸ்காரர். அவரும பர்மாப் பிரிவினையை ஆட்சேபிக்கிறார்.

இந்தியருக்கு விரோதமான சட்டங்கள் சிலவும் சமீபத்தில் பர்மாவில் இயற்றப்பட்டன. அவையும் சமீபக் கலவரங்களுக்குக் காரணமாக விருக்கலாம். சென்ற ஒன்பது மாதங்களாகப் பர்மாவில் நடக்கும் காரியங்களைக் கவனித்தால் பர்மியரில் பிரிவினை வேண்டுபவர்கள் மனதில் இந்தியருக்கு விரோதமான உணர்ச்சி பரவிவருவதாகத் தெரிகிறது. பர்மாவின் வறுமைக்கே இந்தியர்தான் காரணமென அவர்கள் நினைக்கின்றனர். இந்த உணர்ச்சியைப் பர்மாவிலுள்ள இந்தியருக்கு விரோதமான சில பத்திரிகைகள் அதிகப்படுத்திவருகின்றன. பர்மாவிலுள்ள அரசாங்க உத்தியோகஸ்தர்களில் சிலரும் இவ்வித உணர்ச்சி பரவுவதற்குக் காரணஸ்தர்களாக விருப்பதாக எங்கும் நம்பப்படுகிறது. இதில் சற்று உண்மையிருப்பதாகவும் தெரிகிறது.

பர்மாவில் உள்ள இந்தியரின் நிலைமையைப்பற்றி விஸ்தாரமாக எடுத்துச் சொல்லப் பர்மா இந்தியப் பிரதிநிதிகள் இராஜப் பிரதிநிதியைப் பேட்டி கண்டபோது சில அரசாங்க உத்தியோகஸ்தர்கள் பொறுப்பற்றவிதமாகப் பேசியதும் பர்மாக் கலவரத்துக்கு ஒரு ஆதாரவாக வந்து முடிந்தது.

இனி நான் என் தீர்மானத்தில் குறித்த கமிட்டி நியமனத்தைப்பற்றிச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இக்கமிட்டி நியமனத்தில் எவ்வித வித்தியாசமும் பாராட்டக்கூடாது. இக்கமிட்டியில் இந்தியர், பர்மியர், சீனர், ஐரோப்பியர் முதலிய யாவரும் இருக்கவேண்டும். இக்கமிட்டிக்குக் கூடுமானால் ஹைகோர்ட்டு ஜட்ஜ் ஒருவர் தலைவராக விருக்கவேண்டும். அவர் பர்மா ஹைகோர்ட்டைச் சேர்ந்தவராயினும் சரி அல்லது இந்தியாவிலுள்ள வேறு ஹைகோர்ட்டுகளைச் சேர்ந்தவராயினும் சரியே. பட்சபாதமற்ற முறையில் விசாரணை நடத்தி அவர்கள் முடிவு கூறவேண்டும். பர்மாவில் உள்ள பற்பல ஸ்தாபனங்களின் பிரதிநிதிகளும் அக்கமிட்டியில் இருக்கவேண்டும். அதாவது பர்மா ஐரோப்பிய வியாபாரச் சங்கம் முதலியவற்றின் பிரதிநிதிகளுக்கும் இக்கமிட்டியில் ஸ்தானமிருக்கவேண்டும். இந்திய அரசாங்கத்திலிருந்தும் சட்டசபையிலிருந்தும் உத்தியோக அங்கத்தினர்களைப் பொறுக்கிக்கொள்ளலாம். இவ்விதம் ஒரு கமிட்டி அமைத்தால்தான் பட்சபாதமற்ற முறையில் விசாரணை நடத்தி ஒரு முடிவு கூறமுடியும்.

#### "செட்டியார் மீது பழியா?"

மேலே குறிப்பிட்ட தீர்மானத்தை திரு. ராஜாராம் பாண்டியன் இறுதியில் வாபீஸ் வாங்கிக் கொண்டார். இவ்விஷயத்தைக் குறித்து, "சுதந்தரன்" பத்திரிகை "செட்டியார் மீது பழியா?" என்ற தலைப்புடன் பின்வரும் தலையங்கத்தை எழுதியுள்ளது:—

இந்தியச் சட்டசபையில் பர்மாக் கலகம் சம்பந்தமாகக் கேள்வி பிறந்தது. பர்மாக் கலகத்திற்கான காரணங்களை அறிவதற்கும் அவைகளை நிவர்த்தி செய்வதற்கும் அதனுடன் உயிர் நஷ்ட மடைந்தோர்க்கு நஷ்டஈடு அளிக்கச் சிபார்சு செய்வதற்கும் உத்தியோகப்பற்றுள்ள அங்கத்தினர்களும் உத்தியோகப் பற்றற்ற அங்கத்தினர்களுங் கொண்டதோர் விசாரணைக் கமிட்டி அமைக்கப்பெற வேண்டுமென திரு. ராஜாராம் பாண்டியன் பிரரேபனை யொன்று கொண்டுவந்தார். அது சமயம் "இந்தியாவிலிருந்து பர்மாவைப் பிரிவினை செய்வதற்கான பிரசாரமே கலகத்திற்குப் பெருங் காரணமாகும். இக் கலகத்தால் அந்நாட்டில் இந்தியர்களுடைய உயிருக்கும் பொருளுக்கும் பெரு நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. அங்குஇந்தியர்களுக்குப் பாதுகாப்பென்பது கிடையாது. இந்தியாவிலுள்ள அவர்களுடைய உறவினர்க்கும் பெருத்த மனக்கவலை ஏற்படலாயிற்று. ஆயிரக் கணக்கானோர் ஏற்கனவே இந்தியாவிற்குத் திரும்பிவிட்டனர். இவர்கள் பர்மியர்களால் பெரு நஷ்ட மடையலாயினர். ஸ்தல சர்க்கார் தக்க ஏற்பாடுகளை விரைவினில் எடுத்துக் கொள்ளவில்லை; பாராமுகங் காட்டலாயினர்; இந்தியர்களைப் பாதுகாக்க முன் வந்தார்களில்லை" என்ற பொருள் படும்படி திரு. ராஜாராம் பேசியுள்ளார்.

ஆம்; இந்தியர்களுக்கு இவண் உயிர் நஷ்டமும் பொருள் நஷ்டமும் மிகவே ஏற்படலாயின. ஆனால் கலகத்திற்கும் இந்தியர் தாக்கப்பெற்றதற்கும் எவ்வித சம்பந்தமுமில்லை எனத் திட்டமாகக் கூறுவோம். கலகம் சர்க்காருக்கு விரோதமாக ஏற்பட்டதாகும். அதைச் சர்க்காரும் தாராளமாக ஒத்துக் கொள்ளத்தான் செய்கின்றனர். வறுமை வயப்பட்ட ஏழைப் பர்மிய விவசாயிகளும் தொழிலாளர்களும், தலைவரி தாத்த மீடா வரிக் கொடுமையையும் அவைகளை வசூலிப்பதற்கான அடக்கு முறைகளையும் சகிப்பதற்கின்றிக் கலகம் விளைவிக்கலாயினர். சர்க்கார்ப் படைகளையும் கிராமாதிகாரிகளையும் சர்க்காருக்குத் துணை நிற்கும் ராஜ விசுவாசிகளையும் தாக்கலாயினர். ஆனால் இந்தியர்கள் கலகக்காரர்களால் எவ்விதத்திலும் பாதிக்கப் பெறவில்லை. கலகம் ஓர் புறம் நடக்க இந்தியர் மற்றோர் புறம் இதரால் தாக்கப்பட்டனர். பிரிவினையை ஆதரித்து நிற்கும் சில பிற்போக்கான பத்திரிகைகளின் விஷமப் பிரசாரத்தாலும் தாராவாடிக் கலகத்தைச் சமூகக் கலகமாக மாற்றிவிட வேண்டுமென்ற சுயநல வாதிகளின் சூழ்ச்சியாலும் காலாடிப் பர்மியர்கள் ஆவேசத்துடன் எழலாயினர்; இந்தியர்களை ஆங்காங்குக் கொடுமையுடன் தாக்கலாயினர். இதனால் ஏழை இந்திய விவசாய மக்கள் பெருத்த பொருள் நஷ்டமும் உயிர் நஷ்டமும் அடையலாயினர். இன்னும் உயிரைக் கையில் பிடித்தே திரிகின்றனர். அதனால் கலகம்பற்றி விசாரிக்க வேண்டிய கமிட்டி வேறாகும். இந்தியர்கள் தாக்கப் பெற்றதை விசாரிக்க வேண்டிய கமிட்டி வேறாகும்.

உள்ள விஷயங்களை நாம் பட்டவர்த்தனமாக அவ்வப்போதே விளக்கி வந்துள்ளோம். அதன்படி விசாரணைக் கமிட்டிக்கான கேள்வி பிறந்திருப்பின் நலமாயிருக்கும். அவ்விதம் ஆவதற்கில்லை. அதனாலேயே பர்மா சர்க்காரின் பிரதிநிதி மிஸ்டர் லீச் அதி சுலபமாகப் பதில் கூறி, திரு. ராஜாராம் பாண்டியனின் வாயை அடைத்து விட்டார். ஆனால் கலகத்திற்கான காரணங்கள் தொழில் சம்பலும் நெல்விலை வீழ்ச்சியுமாகும் எனக் கூறுகிறார். எக்கலகத்திற்கு? தாராவாடிக் கலகத்திற்கா அல்லது காலாடிகளின் கலகத்திற்கா எனக் கேட்கிறோம். இரண்டுக்குந் தான் எனின், தாராவாடிக் கலகத்திற்குக் காரணம் சயா சான் அரச பதவியை வகிக்கும் நோக்கமே எனச் சர்க்கார் வெட்ட வெளிச்சமாகக் கூறி வருவதன் அர்த்தமென்னவெனக் கேட்கிறோம். தாராவாடிக் கலகத்திற்குத் தொழில் சம்பலும் நெல் விலை வீழ்ச்சியும் மூல காரணமென்பதை மிஸ்டர் லீச்சுடன் நாமும் ஒப்புக்கொள்கிறோம். ஆனால் காலாடிகள் இந்தியர்களைத் தாக்கியதற்குத் தொழில் சம்பலும் நெல் விலைக் குறைவுமே மூல காரணம்——ஆதி காரணமென மிஸ்டர் லீச் தமது நெஞ்சில் கரம் வைத்து கூறுவாரா? அத்துடன் அவர் நின்றாரில்லை. ஒரு அடி அப்பால் தாவுகிறார்.

லேவாதேவி செய்பவர்களில் அநேகப் பகுதியினரான இந்தியர் நடந்துகொண்ட முறையால் நிலைமை விகார மடையலாயிற்று—கலகம் அதிகரிக்கலாயிற்று என்கிறார். லேவாதேவி செய்யும் இந்தியர் நகரத்துச் செட்டி மக்களாவர். இவர்கள் எவ்விதம் முறையின்றி நடந்து கொண்டனர், அதனால் கலகம் அதிகரிக்கலாயது எனக் கேட்கிறோம். "தொழில் சம்பலும் நெல் விலை வீழ்ச்சியும் ஏற்பட்ட பின் தாங்கள் கொடுத்த கடன்களின் வட்டிகூட விவசாயிகளிடமிருந்தும் இதரரிடமிருந்தும் வரப் பெறாதிருக்கும் பொழுது மற்றுங் கடன் கொடுக்க அவர்கள் தயங்கியது முறையற்றதா? தாங்கள் பட்ட கடன்களுக்கு ஈடு செலுத்தத் தாங்கள் விடுத்த——கொடுத்த——கடன்களை வசூலிக்க முற்பட்டது முறையற்றதா?" எனக் கேட்கிறோம். இவ்விதம் மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிபோட முற்படுவதை எவரே எள்ளி நகையாடாதிரார்!

சில விஷமப் பத்திரிகைகளுடையவும் சுயநலவாதிகளுடையவும் அயோக்கியப் பிரசாரங்களால் காலாடிப் பர்மியர்கள் இந்தியர் மீது துவேஷம் பூண்டு தாக்கினர்; கொள்ளையடித்தனர்; கொலை செய்தனர். அக்கோரச் செயல்களுக்குத் தொழில் சம்பலும் நெல் விலைக் குறைவும் பின் துணை நிற்கலாயின. இந்தியா போன்று இதர எச் சமூகத்தினரும் பெருத்த பொருள் நஷ்டமோ உயிர் நஷ்டமோ அடையவில்லை. இந்தியர்கள் தாக்கப்பெற்ற காரணங்களை அறிவதற்கும் அவர்களுக்குண்டான நஷ்டஈடு அளிக்கச் சிபார்சு செய்வதற்கும் விசாரணைக் கமிட்டி அமைக்கப்பெற வேண்டியது அவசியமாகும். செட்டியார்கள் மீது பழி சுமத்தி விட்டு விஷயத்தை மழுப்பி விடுவது முறையல்ல; தர்மமாகாது. திரு. ராஜாராம் பாண்டியனும் அவரை ஆதரித்து நின்ற ஜனப் பிரதிநிதிகளும் விஷயமறியாது பிரரேபனையை வாபஸ் பெற்றுக்கொண்டதற்காக நாம் வருந்துகிறோம்.

# "காந்தி ஓர் பக்கா முஸ்லீம்."

## இறைவனின் தூதர் மகாத்மாவே.

### ஜனுப் ஜமால் முகம்மதுவின் புகழுரை.

சென்னை ஜனுப் ஜமால் முகம்மது இந்திய வியாபாரச் சங்கத்திற்காக வட்டமேஜை மகாநாட்டுக்குச் சமீபத்தில் நியமிக்கப்பட்ட மூன்று பிரதிநிதிகளுள் ஒருவராவர். அவர் லண்டன் செல்லுவதை முன்னிட்டு, செப்டம்பர் மீ ௨அ-௨ மாலை பெரம்பூர் ஜமாலியா அராபிக் கல்லூரி உபாத்தியாயர்களும் மாணவர்களும் அவருக்கு ஓர் தேநீர் விருந்து அளித்தார்கள். கல்லூரித் தலைமையாசிரியர் அப்ஸால் உல் உலிமா ஸையத் அப்துல் வஹாப் பொக்காரி அதற்குத் தலைமை வகித்தார். அவ்விருந்துக்கு திரு. ஜமால் முகம்மது பதிலளிக்கையில் கூறியதன் சாரமாவது:—

#### உலகத்திலேயே மிகப் பெரியார்.

திரு. காந்தியையும் அவருடைய கடவுள் நம்பிக்கையையும் பற்றி பிரசங்கித்தோர் பிரஸ்தாபித்தது எனக்குச் சந்தோஷத்தைத் தருகிறது. ஒரே ஒரு மனிதர், அவரது மதநம்பிக்கை எதுவேயாயினும் சரி, உலகத்திலேயே மிகப் பெரியாரென மதிக்கப்படுவது உண்மையிலேயே மிக விசேஷமாகும். இந்தியாவில் உள்ள ௩௰-கோடி மனிதர்களால் மாத்திரமல்ல, பிறநாட்டவராலும் மகாத்மா காந்தி அவ்வாறே மதிக்கப்பட்டுள்ளார். இந்தியாவிலுள்ள ௩௰-கோடி மனிதர்களுக்கும் அவரிடம் பூரண நம்பிக்கையிருக்கிறது. மகாத்மா காந்தியிடம் இன்னோர் விசேஷமுமிருக்கிறது. தங்களுடைய பரம சத்துருவென்றும் தங்கள் ஜீவனத்தைக் கெடுத்தவரென்றும் அவரை எண்ணுவோருங் கூட இதுகாலை அவரை உபசரித்து வரவேற்றுப் புகழ்ந்து மரியாதை செலுத்துகின்றார்கள். ஆனால், இப்பொழுது அவரைப்பற்றி உயர்ந்த புகழுரைகள் பகர்வோர், மகாத்மாவின் நியாயமான கோரிக்கைகளை விட்டுக் கொடுப்பார்களா என்பது எனக்கு மிகவும் சந்தேகமாகவே யிருக்கிறது. ஆனால், கடவுளிடம் நம்பிக்கை வைத்துத் தங்களால் முடிந்த முயற்சியை யெல்லாம் செய்வோர், சோர்வுற வேண்டியதில்லை.

#### இறைவனின் தூதர்.

இப்பொழுது உலக முழுவதும் ஏற்பட்டுள்ள கடுமையான நிலைமை நமக்கு எதிர்ப்பட்டிருக்கிறது. ராஜீயநிபுணர்கள் நிலைமையைச் சீர்செய்ய முயற்சி செய்து, ஓர் வழி காணமுடியாது தோல்வியுற்று விட்டார்கள். ஏதாவது வழியிருக்குமானல், அது கடவுளால் காட்டப்பட வேண்டுமென்றே நான் கருதுகிறேன். எங்கேயாவது எத்தேசமாவது சாம்ராஜ்யமாவது மிகப் பாதாளத்திலே விழ்ந்துவிட அதனால் மனித சமூகம் துன்புறுமாயின், இறைவன் அருள் புரிந்து ஏதாவதோர் கருவி மூலம் உலகத்திலே அமைதியை உண்டாக்குவார் என்ற நம்பிக்கை உலகத்துள்ள எல்லா நாட்டு ஜனங்களுக்குமிருந்துவருகிறது. இத்தகைய நம்பிக்கை யுடையவருள் நானுமொருவன். இவ்வுலகத்தில் இறைவன் தம் சித்தத்தை நிறைவேற்றும் அத்தகைய கருவிகளாயிருப்பவரை, இறைவனின் தூதர் என்றோ காரியஸ்தர் என்றோ கூறலாம். மகாத்மா அத்தகைய பெருள் ஒருவரே என நான் நம்புகிறேன். (சந்தோஷ ஆரவாரம்) எல்லாம் வல்ல இறைவன் தம் சித்தத்தை நிறைவேற்ற ஓர் இந்தியரைத் தேர்ந்து கொண்டதற்கு, முக்கியமாக இந்தியராகிய நாம் பெருமை கொள்ளவேண்டும். மகாத்மாகாந்தி லண்டன் சென்றதைப்பற்றி நான் சந்தோஷப் படுவதற்கு இது வோர் காரணமாகும்.

#### இந்தியாவின் உன்னத பாக்கியம்.

நான் உலகத்தின் வருங்காலம் நன்மையாகவே முடியுமென்ற நம்பிக்கையுடையவன். தற்பொழுதைய துன்பம் எத்தகைத்தாயிருப்பினும், விடிவுக்காலம் நிச்சயம் வரும். அந்த விடிவுக்காலத்தில் இந்தியா ஓர் முக்கிய ஸ்தானத்தை வகிக்கும். உலகாயதக்காரர்களாலும், பிறரை இம்சிக்கும் தேசபக்தியுடைய நாட்டவராலும் உலகம் போதிய துன்பம் அனுபவித்துவிட்டது. இதற்கோர் முடிவுவந்தாக வேண்டும். இவ்வகில வுலகமும் ஒரே எஜமானரால் தான் சிருஷ்டிக்கப்பெற்றுள்ளது. அவர்சக்கரவர்த்திகளுக்கெல்லாம் சக்கிரவர்த்தியாவார். தர்மம் நிலைபெறுமாறு அவர் பார்த்துக்கொள்ளுவார். உலகின் துன்பங்கள் சிலவற்றிலின்றும் அதனை விடுவிக்கத்தக்க உன்னத பாக்கியம் இந்தியாவுக்குக் கிடைக்கப்போகின்றதென்று நான் நம்புகிறேன். இந்தியா ஆன்மார்த்தத் துறையில் மாண்புமிக்கது. உலகின் நான்கு பெரும் சமயங்கள் அதில் சந்தித்துளது. சீர்திருத்தவேலை இத்தேசத்தினின்றே புறப்படவேண்டும்.

#### இஸ்லாமார்க்க உட்கருத்து.

இதனை இந்தியர் பூரணமாக உணர்ந்து கொள்ளவில்லையே என்பதுதான் என் வருத்தம். குறுகிய மனப்பான்மையால் எழுந்துள்ள, உள் சச்சரவுகள் இன்னும் நடந்துவருவதற்குத்தான் வருந்துகிறேன். நமது வேற்றுமைகளை நாம் சமரசம் செய்து கொள்ளத் தக்கவர்களல்லாயின், உலகத்திற்கு நாம் எவ்வாறு வழிகாட்டப் போகின்றோம்? அதனால் தான் இந்து-முஸ்லீம் ஒற்றுமை விஷயத்தில் நான் கூர்ந்த சிரத்தை எடுத்துக்கொண்டுளேன். இந்தியாவிலுள்ள முஸ்லீம்களுட் சில பிரிவினர், இஸ்லாம் மார்க்கத்தின் உட்கருத்தை நன்குக விளங்கிக்கொண்டு அதன்படி நடக்கவில்லை. இது எனக்கு வருத்தத்தைத் தருகிறது. இஸ்லாத்தின் மிக முக்கியமான கொள்கை உலகத்திலுள்ள சகல ஜனங்களிடத்தும் சகோதரத்துவம் பாராட்டுதலே. இந்த விஷயத்தை நமது தெய்விக தீர்க்கதரிசி அடிக்கடி வற்புறுத்தியிருக்கிறார். (இந்த உன்னத இலட்சியத்தை விளக்குவதற்காக உபந்நியாசகர் திருக்குரானிலிருந்து பல கவிகளை எடுத்துரைத்தார்.)

#### காந்தி ஓர் பக்கா முஸ்லீம்.

இஸ்லா மார்க்கம், அநேக தத்துவங்களின் தொகுப்பேயாகும்; வெறும் குருட்டு அபிப்பிராயங்களைக் கொண்டதல்ல. இதுவே என் அபிப்பிராயம். இவற்றை எவர் பின்பற்றி நடந்தாலும், அவர் ஓர் முஸ்லீமேயாவார். மகாத்மா காந்தி ஓர் பக்கா முஸ்லீம் என்பதே எனது அபிப்பிராயம். பிற சமயத்தவர்களும் இதைப்போலவே மகாத்மா தங்கள் மதஸ்தரெனப் பாத்தியம் கொண்டாடுகிறார்கள். சகல மதங்களினதும் மூலாதார தத்துவங்களையெல்லாம் அவர் அநுஷ்டித்து நடக்கிறார் என்பதையே இது உருசுப்பிக்கின்றது. இஸ்லாம் மார்க்கத்துக்கு மிகப் பெரும் தீமையைப் புரிபவர் முஸ்லீங்களே என்று நான் அஞ்சுகிறேன். இஸ்லாம் மார்க்கம் ஓர் இலட்சியத்தைச் சாதித்துப் பூர்த்தி செய்ய விருக்கிறது என்பதை அவர்களுடைய தலைவர்கள் உணர்ந்து கொள்ளவில்லை. இதனை அவர்கள் உணர்ந்து கொண்டு, தங்கள் அயலகத்தவரான பிற வகுப்பினருடன் ஒத்துழைத்து, உலக நலத்தைக் கோணர்வரென, நான் மனப்பூர்வமாக நம்புகிறேன்.

---

#### அய்மேன்.

மாதக்கூட்டம்:— ஷண்முகானந்த சங்கத்தின் மூன்றுவதாண்டு பத்தாம் திங்கட் கூட்டம் சென்ற ஆவணித் திங்கள் ௩௧-ம் நாள் இரவு அ-மணிக்கு மேல் உயர்திரு ஆர். அருணாசலம் தலைமையின் கீழ் நடைபெற்றது. அஞ்ஞான்று கடவுள் வணக்கம் பாடப்பட்டதும் திருவாளர்களான எச். சுந்தரராம பிள்ளை, எம். எஸ். செல்லய்யா செட்டியார், எஸ். மாணிக்க வாசகன், ஏ. எல். சுந்தரராஜன், நாச்சியப்பன், முதலியவர்கள் முறையே "இந்தியாவின் வறுமை வாசிப்பது ஏன்?" "கைத்தொழில்" "பொடியின் தீமை" "இந்தியக் கடன்" என்பதுபற்றியும் நீண்டநேரம் மிக அழகாகப் பேசினார்கள். பின்னர் தலைவரவர்கள் ஒவ்வொன்றுக்கும் தக்க சான்றுகளுடன் முடிவுரை கூறியதும் இளைஞர்களால் குயிலினுமினிய குரலோசையினுல் தேசிய கீதம் பாடப்பட்டதும் அருணகிரியால் சபையினர்க்கு நன்றியறிவிக்கப்பட்டு மங்கள வாழ்த்துடன் இரவு ௧௦-மணிக்கு சபை இனிது நிறைவெய்தியதென ஸ்ரீ ஷண்முகதாசன் எழுதுகிறார்.

---

#### காலி (சிலோன்.)

இந்தியன் பாட்மிண்டன் கிளப்:—மேற்கண்ட கிளப் அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு நாளது செப்டம்பர்-மீ ௩-உ யன்று பேல்ஸ் டோர்னமெண்டு பைனல்ஸ் (௧) எம்டன்டீம் (௨) நவர்மயின்டீம் ஆகிய ஆகிய இருகாத்தார்களுக்கும் விமரிசையாய் விளையாட்டு மிகவும் அழகாக நடைபெற்றது. அதில் எம்டன் டீம் உறுப்பினர்கள் திரு. வயி. லெ. வயிரவன் செட்டியார் திரு. எ. டி. எ. சின்னத்துரை ஹென்ரு திரு. கே. நாராயணசாமி திரு. எஸ். டி. டேவிட் ஆகிய கண்ட அங்கத்தினர்களால் வெற்றி கொள்ளப்பட்டு வெற்றி பெற்றவர்களுக்கு முறையே ஒவ்வொருவருக்கும் திறம் பட்டுக் கைபிடி லேஞ்சுகள் பரிசளிக்கப்பட்டன. பிறகு அங்குக் கூடியிருந்த அனைவருக்கும் சிற்றுண் அருந்தச் செய்து மிகவும் சந்தோஷகரமாக "ஜே" என்ற கரகோஷத்தினிடையே கூட்டம் கலைய பெற்றது. என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

---







# இர்வின்-காந்தி சீர்திருத்தம்.

## இந்தியரும் வைசிராயாகலாம்.

### இடைக்கால ஏற்பாடுகள்.

மகாத்மா காந்திக்கும் வைசிராய் இர்வின் பிரபுவுக்கும் ஏற்பட்ட டில்லி உடன்படிக்கைக்கு முன்னர், இந்தியாவுக்கு எத்தகைய அரசியல் சீர்திருத்தம் அளிக்கப்படவேண்டுமென்பது குறித்துச் சில பேச்சு வார்த்தைகள் நடந்ததாகவும் அதன் பயனகவே அவ்வுடன்படிக்கை ஏற்பட்டதாகவும் அமெரிக்காவிலுள்ள நியூயார்க் "ஹெரால்டு டிரிப்யூன்" என்ற பத்திரிகையின் நிருபர் எழுதியிருக்கிறார். மகாத்மாவுக்கும் வைசிராய் இர்வினுக்கும் நடைபெற்ற பேச்சு வார்த்தைகளில் விவாதிக்கப்பட்ட அவ் அரசியல் சீர்திருத்தத் திட்டத்தினை அவர் பின்வருமாறு தந்திருக்கிறார்:—

#### முடிவான மத்திய அரசாங்கம்.

சமஷ்டி இந்தியாவில் மத்திய அரசாங்கத்தில் ஓர் வைசிராய் இருப்பார். இரு சட்டசபைகள் இருக்கும். சட்டசபைக்குப் பொறுப்புடைய மந்திரிசபை ஒன்றிருக்கும்; பிரிட்டிஷ் ஏகாதிபத்திய விவகாரங்கள் சம்பந்தப்பட்ட மட்டில், சுயஆட்சியோடு கூடிய பிற பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளைப்போலவே, அவ்வரசாங்கம் அந்தஸ்துடையதாயிருக்கும். அவைகளுக்குள்ள சுதந்திரமும், அதிகாரங்களும் பொறுப்புகளும் இதற்குமிருக்கும். ஏகாதிபத்தியத்தை விட்டுப் பிரியகூடிய உரிமையும் இருக்கும். குடியேற்ற நாடுகளிலும் அந்நிய நாடுகளிலும் தங்கள் பிரதிநிதிகளைத் தங்கள் அரசியல் காரியஸ்தர்களாக நியமிக்கும் உரிமையும் இதற்கு இருக்கும். பிற குடியேற்ற நாடுகளுக்கு உள்ளவைபோன்ற அதிகாரங்கள், அந்நிய நாடுகள் சம்பந்தமான விவகாரங்களில் மிருக்கும்.

#### இந்தியரே வைசிராயாகலாம்.

இந்த முடிவான பூரண குடியேற்ற நாட்டு அந்தஸ்து ஏற்படுவதற்கு ஒரு திட்டமான காலநிர்ணயம் செய்யப்படும். (அது சம்பந்தமாக இன்னும் ஒரு உடன்பாடு ஏற்படவில்லை.) முழுக குடியேற்ற நாட்டந்தஸ்து ஏற்படுவதற்கு முன்னுள்ள இடைக்காலத்தில், இதுவரையிற் போலவே, மன்னர் பிரானின் சார்பாகப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் வைசிராயை நியமிப்பார். ஆனால், இந்த இடைப்பட்ட காலம் பூர்த்தியானதும், இந்தியச் சமஷ்டி அரசாங்கத்தின் பிரதம மந்திரி செய்யும் சிபார்சின்மேல் வைசிராய் நியமிக்கப்படுவார். அப்பொழுது அவர் ஓர் இந்தியராகவுமிருக்கலாம். அவ்வாறு இந்தியராயின், சுதேசமன்னர், ஹிந்து, முஸ்லீம் ஆகியவர் மாறி மாறி அப்பதவியை வகிக்கலாம்.

#### இடைக்காலப் பாதுகாப்புக்கள்.

இந்த இடைப்பட்ட காலத்தில், மன்னர்பிரான் அதிகாரத்துக் குட்பட்டவையென இன்னும் கருதப்பட்டுவரும் தற்காப்பு ராணுவமும், அந்நியநாட்டுச் சம்பந்தமான விவகாரங்களும் முழுவதும் வைசிராயின் ஆதிக்கத்திலேயே இருக்கும். என்றாலும், இதில் வைசிராயின் அதிகாரத்திற்கு ஓர் நிபந்தனை வைக்கப்படும். இந்தியாவிலும் பிரிட்டனிலும் பொறுப்பான நலன்களுடையவர்களின் பிரதிநிதிகளடங்கிய தோர் கமிட்டியைப் பொதுவாகக் கலந்து ஆலோசித்தே அவ்விஷயங்களை அவர் நிர்வகிப்பார். நெருக்கடியான அவசரச் சந்தர்ப்பங்களில் மட்டில், அவர் தமது விசேஷ அதிகாரங்களைத் தம் சொந்தப் பொறுப்பில் உபயோகிப்பார்.

#### சேராத சமஸ்தானங்களின் விஷயம்

சமஷ்டி அரசாங்கத்தில் சேராத இந்திய சமஸ்தானங்களுடன் சமஷ்டி அரசாங்கத்தின் சகல சம்பந்தங்களிலும் வைசிராயே மன்னர்பிரானின் பிரதிநிதியாக அலுவல் புரிவார். பாரசீகம், ஆப்கானிஸ்தானம், திபேத் இன்னும் இந்தியாவின் எல்லைப்புறத்திலுள்ள அந்நிய நாடுகள் ஆகியவற்றுடன் சம்பந்தமான காரியங்களிலும் வைசிராயே பொறுப்புடையவராக விருப்பார். இடைப்பட்ட காலம் முடிவுற்றதும், இப்பொறுப்பு மந்திரி சபையின் அலுவல்களில் ஒரு பகுதியாக மாறிவிடும்.

#### மந்திரிசபை அமைப்பு

சமஷ்டி அரசாங்கத்தின் முக்கிய நிர்வாக அதிகாரம் ஓர் மந்திரி சபையிடமிருக்கும். அதில் சுதேச மன்னர்களின் பிரதிநிதிகளும் இரு சட்டசபைகளிலும் சேர்ந்து பெரும்பான்மை பெற்ற ஒரு கட்சியின் அல்லது ஒன்றுக்குமேற்பட்ட கட்சிகள் சேர்ந்த கூட்டுறவின் பிரதிநிதிகளும் அதில் இருப்பர். மந்திரி சபைக்குத் தலைவராக ஒரு பிரதம மந்திரி யிருப்பார், சட்டசபையில் மிக அதிகமானவர்களைக் கொண்ட கட்சியின் தலைவராக அவர் இருக்கவேண்டும். சமஷ்டி அரசாங்க சம்பந்தமான சகல சட்டங்களையும் மந்திரிசபை கொண்டுவரும்; வருஷாந்திர வரவு செலவுத் திட்டத்தையும் அது ஆஜர் செய்யும். மாற்றப்படா இலாக்காக்களெனத் திட்டமாகக் குறிப்பிடப்படாத மற்ற அரசாங்க இலாக்காக்களின் மீதெல்லாம் மந்திரிசபைக்குப் பூரண அதிகாரங்களிருந்துவரும். இரண்டு சட்டசபைகளும் சேர்ந்து கூட்டாக நம்பிக்கையில்லாத் தீர்மானம் செய்தால், அந்த மந்திரி சபை கலைந்துவிடப்படும். எக்கட்சிக்கும் போதிய பெரும்பான்மை யில்லாவிட்டால், சட்டசபைகள் கலைத்துவிடப்படும்.

#### சட்டசபைகளமைப்பு.

அரசியலமைப்பால் இணைந்த இந்தியச் சமஷ்டியின் அதாவது இந்தியச் சமஸ்தானங்கள் பிரிட்டிஷ் இந்தியா ஆகியவற்றின் பிரதிநிதிகள் சட்டசபையில் அடங்கியிருப்பார்கள். இரு சட்டசபைகளிலும் இரு சார்புப் பிரதிநிதிகளும் அடங்கியிருப்பர்; ஆனல், விகிதங்கள் மட்டில் வித்தியாசமாயிருக்கும். கீழ்ச்சபையில் இந்திய சமஸ்தானப் பிரதிநிதிகளின் விகிதம், மொத்தப் பிரிட்டிஷ் இந்தியப் பிரதிநிதிகளின் எண்ணிக்கையில் நாலிலொன்றுக்குமேலிராது. பிரிட்டிஷ் இந்தியப் பிரதிநிதிகள், தேர்தல் தொகுதிகளால் நேரே தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இந்திய சமஸ்தானப் பிரதிநிதிகளோ ஒரு பகுதியார் மட்டில் வாக்காளரால் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்; மற்றொரு பகுதியார் சமஸ்தான அரசாங்கங்களால் நியமிக்கப்படுவார்கள். மேல் சபையில் இந்திய சமஸ்தானப் பிரதிநிதிகள் நூற்றுக்கு நாற்பது விகிதம் இருப்பார்கள்.

#### சிறுபாலோர் பிரதிநிதித்துவம்.

சிறுபான்மைச் சமூகத்தவர் பிரதிநிதித்துவம் சம்பந்தப்பட்ட மட்டில், கூட்டுத் தொகுதியை உண்டாக்க முயற்சி செய்யப்படும். இம் முயற்சியில் வெற்றி ஏற்படாத இடங்களில், ஒரு ராஜி ஏற்பாடு செய்யப்படும். இந்த ராஜி யாதெனில் ஒவ்வொரு பொதுத் தேர்தலுக்கு முன்னர், சிறுபான்மைச் சமூக வாக்காளரிடம் இவ்விஷயத்தை ஓட்டுக்குவிட வேண்டுமென்பதே. அவ் வோட்டுக்களின் முடிவு, தனித்தொகுதிகளைப் பின்னும் வைத்திருக்க வேண்டுமென்று ஏற்பட்டால், தனித் தொகுதி முறை அத்தேர்தலில் அனுஷ்டிக்கப்படும். அடுத்த தேர்தல் வரும்பொழுது இதே ஏற்பாடு மறுபடியும் அனுஷ்டிக்கப்படும்.

#### மாகாண அரசாங்கங்களின் அமைப்பு

மாகாண அரசாங்கங்கள் மாகாண விஷயங்கள் யாவற்றிலும் முற்றிலும் பொறுப்பும் சுய ஆட்சியும் உடையவையாகவிருக்கும். அவற்றிற்குச் சட்டசபைகளும் மந்திரி சபைகளுமிருக்கும். என்றாலும் எந்த மாகாணத்திலாவது மாகாண நிர்வாக யந்திரம் தோல்வியுற்று, பொதுஜன அமைதிக்கும் பத்திரத்துக்கும் குலைவு ஏற்படும்போலிருந்தால், சமஷ்டி அரசாங்கம் அதில் தலையிடும். சமஷ்டி சம்பந்தமான எல்லா விஷயங்களிலும் சமஷ்டி உத்தியோகங்களின் விஷயத்திலும், மாகாண அரசாங்கங்கள் சமஷ்டி அரசாங்கத்தின் ஏஜண்டுகளைப் போல் அலுவல் புரியும்.

#### இடைக்கால ராணுவ விஷயம்.

பூரணக் குடியேற்ற நாட்டந்தஸ்து ஏற்படு முன்னுள்ள இடைக்காலத்தில், இந்தியாவின் தற்காப்பு ராணுவ விஷயம், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் கூட்டுறவு கொண்ட சகல நாடுகளதும் தற்காப்பு ராணுவ விஷயத்தின் ஒரு பகுதியாயிருக்கும். அப்பொழுது லண்டனிலுள்ள ஏகாதிபத்தியத் தற்காப்பு ராணுவக் கமிட்டியின் அதிகாரத்துக்கு இந்தியத் தற்காப்பு ராணுவ விஷயம் உட்பட்டிருக்கும். ஆனல், இறுதியில் தனது தற்காப்புக்குத் தானே பொறுப்புடையதாகிவிட வேண்டும் என்ற கொள்கை அங்கீகரிக்கப்படும்; ராணுவ விஷயங்களில் இந்திய ராணுவக் கமிட்டி யொன்று வைசிராய்க்கு ஆலோசனை கூறிவரும். அக்கமிட்டியில், சமஷ்டிச் சட்டசபையின் பிரதிநிதிகளும், இந்திய சமஸ்தானங்களின் பிரதிநிதிகளும், கமாண்டர் இன் சீப்பும் (இந்தியத் தலைமைச் சேனபதி) ஜெனரல் ஸ்டாப் தலைவரும் இருப்பார்கள்; இந்திய ராணுவ மந்திரி அதற்குத் தலைவராயிருப்பார்.

#### ராணுவமும் வைசிராயும்.

சாதாரண காலங்களில் அக்கமிட்டியின் ஆலோசனையைக்கேட்டே வைசிராய் தமது அதிகாரங்களைச் செலுத்துவார். அக்கமிட்டியே ராணுவத்தின் வரவு செலவுத் திட்டத்தைத் தயாரிக்கும். வருமானத்தில் இச்செலவே முதன்மையானதாக விருக்கும். அவசர நெருக்கடியில், தம்மிச்சையாகச் செயல்புரிய வைசிராய்க்கு அதிகாரமுண்டு. ஆனல், எத்தகைய நிலைமைகள் அவசர நெருக்கடியாகும் என்பதைத் திட்டமாகக் குறித்து வரம்பு ஏற்படுத்தப்படும். ராணுவத்தை இந்திய மயமாக்கும் வேலை தொடர்ந்து நடந்து கொஞ்சங் கொஞ்சமாகப் பிரிட்டிஷ் துருப்புக்கள் குறைக்கப் பெறும்பொழுது, ராணுவக் கமிட்டியில் பிரிட்டிஷ் பிரதிநிதிகள் விலக்கப்பட்டு அதற்குப் பதில் இந்தியப் பிரதிநிதிகள் நியமிக்கப்படுவார்கள். கடைசியில் இந்த ராணுவக்கமிட்டி, இந்திய ராணுவச் சபையாக மாறிவிடும். அச்சபை தனது வருஷாந்திர வரவுச் செலவுத் திட்டத்துக்கு, இதரச் சர்க்கார் இலாக்காக்களைப் போலவே சட்டசபையின் அனுமதியைக் கோரவேண்டும்.

#### பொருளாதார விஷயம்.

இந்தியாவுக்கு ஓர் ரிஸர்வ் பாங்கி ஏற்படுத்தப்படும். அது தேசத்தின் நாணயச் செலாவணியையும் நாணயப் பரிவர்த்தனையையும் கவனித்துக்கொள்ளும். இதைத் தவிர, வைசிராய்க்கு இந்தியப் பொருளாதார விஷயங்களில் ஆலோசனை கூறுவதற்காகத் தேசியப் பொருளாதார போர்டு ஒன்று அமைக்கப்படும். சாதாரணமாக, இந்தப்போர்டின் ஆலோசனையைக்கேட்டே வைசிராய் தமது அதிகாரங்களைச் செலுத்துவார். இந்தப் போர்டில், பிரிட்டிஷ் இந்திய பாங்கிகளதும் வியாபாரிகளதும் ஸ்தாபனங்கள், இந்திய சமஸ்தானங்கள், இந்தியச் சட்டசபைகள் ஆகியவற்றின் பிரதிநிதிகள் இருப்பார்கள்.

#### நிதிமெம்பர்களின் அதிகாரங்கள்.

என்றாலும், இந்திய நிதி மெம்பர்களுக்கு இந்தியாவில் கடன்பத்திரங்கள் விடுக்கவும், பிரிட்டனில் கடன்கள் வாங்கவும் அதிகாரமுண்டு. இந்திய ஸிவில் ஸர்வீஸ் உத்தியோகஸ்தர்களுக்கும் இராணுவ உத்தியோகஸ்தர்களுக்கும் கொடுக்கப்படும் உபகாரச் சம்பளங்களுக்கு (பென்ஷன்கள்) பதிலாக ரொக்கப் பணம் கொடுத்து அவற்றை ரத்துச்செய்யவும் அவர்களுக்கு அதிகாரமுண்டு. இந்த ஏற்பாடுகள் சில வருஷங்களில் முடிந்துவிடுமென்றும், பிறகு தேசிய ராணுவப்போர்டு முடிவுற நிதி மெம்பர்கள் பூரணப் பொறுப்பையும் ஏற்பார்களென்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

#### சமஷ்டியின் முக்கியக்கடமை.

பின்வரும் விஷயம், சமஷ்டி அரசாங்கத்தின் முக்கியக் கடமையாக இருக்கவேண்டுமென்று உடன்பாடு ஏற்பட்டிருக்கிறது. அதாவது:—அந்நிய நாடுகளின் நலன்களுக்கு எதிராக, இந்தியத் தொழில்களையும் பிரிட்டிஷ் பொருளாதார நலன்களையும் பாதுகாக்க வேண்டும்; ஆனல் பிரிட்டிஷ் நலன்கள் இந்திய நலன்களுக்கு விரோதமாக விருப்பின், முன்னதைக் கைவிட்டு, இந்திய நலன்களுக்கே சலுகை காட்ட வேண்டும்.

---

#### சிவகங்கையில் தொழில்வரி ரத்துச் செய்யப்பட்டது.

சிவகெங்கைத் தாலுகாபோர்டு விஸ்திரணத்தில் தொழில்வரியை ரத்துச் செய்துவிடவேண்டுமென்று வந்த மகஜரின்பேரில் சிவகெங்கைத் தாலுகா போர்டார் கவர்ன்மெண்டு சாங்ஷன் வாங்கி ௧௦-௯-௩௧-ல் மதகுபட்டி முகாமில் ஸ்ரீமான் பி. நா. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்களின் தலைமையில் கூடிய சிவகங்கை தாலுகா போர்டுக் கூட்டத்தில் ஏகமனதாய் அக்டோபர்மீ முதல் டை தொழில்வரியை ரத்துச்செய்ய வேண்டுமாய்ப் பாஸ்செய்து டை தீர்மானம் செப்டம்பர்மீ ௨௯-௨-ல் மதுரையில் நடந்த இராமனாதபுரம் ஜில்லா போர்டிலும் ஏகமனதாய் ஒப்புக்கொள்ளப்பட்டது.

ஆகையால் அக்டோபர் மாதம் முதல்தேதி முதல் சிவகெங்கைத் தாலுகா போர்டு எல்கையில் இனிமேல் தொழில்வரிகிடையாது.

---

## புதிய வரி விவரங்கள்.

செப்டம்பர்-மீ உகூ-உ மாலை ௫-மணிக்கு இந்தியச் சட்டசபையில் கனம் ஸர் ஜார்ஜு ஷுஸ்டர் ஆஜர் செய்த உப திட்டத்தில் அடங்கியுள்ள புதிய வரிப் பிரேரேபனைகளின் விவரமாவது:—

### இறக்குமதி வரிகள் உயர்வு.

(க) பருத்தியின் மீது பவுண்டுக்கு கூ பைசா இறக்குமதி வரி.

(உ) இயந்திரங்களின் மீது நூற்றுக்கு ௧௦ வீதம் இறக்குமதி வரி.

(ங) சாயவகைகளின் மீது ௧௦௦-க்கு ௪௦ வீதம் இறக்குமதி வரி.

(௪) பழுப்புச் சர்க்கரை இறக்குமதி வரி அந்தர் க-க்கு ரூ. கூ-௩உ விருந்து ரூ. எ-௪-க்கு உயர்வு.

(௫) பூட்ஸ், அரைபூட்ஸ் இவைகளின் மீது மார்க்கெட் விலைப்படி இறக்குமதி வரி நூற்றுக்கு உ௦ விருந்து மார்க்கெட் விலைப்படி நூற்றுக்கு உ௦ அல்லது ஜதைக்கு ௪-அணவில் ௪௩ அதிகமாக இருக்கிறதோ அந்த வரி.

(௬) செயற்கைப் பட்டு நூலுக்கு மார்க்கெட் விலையின்மேல் நூற்றுக்கு ௧௫ வீதம் இறக்குமதி வரி. அதாவது நூற்றுக்கு ௪௦ விருந்து நூற்றுக்கு ௧௫ ஆக உயர்வு.

(எ) செயற்கைப் பட்டுப் பீஸ்கள், கற்பூரம், எலெக்டிரிக் பல்புகள் ஆகிவவைகளின் மீது விதிக்கப்பட்டுவந்த நூற்றுக்கு உ௦ இறக்குமதி வரி மார்க்கெட் விலையின்மேல் நூற்றுக்கு ௪௦ ஆக உயர்த்தப்படும்.

### சர் சார்ஜு.

(அ) கடைசி வரிச் சட்டத்தின்படி விதிக்கப்பட்ட அதிகவரி (ஸர்சார்ஜ்) உள்பட இறக்குமதியாகும் எல்லாச் சாமான்களின் மீதும் இப்பொழுது இருந்தவரும் விகிதங்களுடன் கால் பாகம் அதிக வரியும், பருத்தி, இயந்திரங்கள், சாய வகைகள் மீதுள்ளவை தவிர புதிய வரிகளின்மீதும் கால் பங்கு அதிகவரியும்.

### வருமானவரி உயர்வு

(௯) ஆயிரம் ரூபாய்க்கு மேற்பட்டு ககககக ரூபாய்க்குட்பட்ட வருமானங்களுக்கு இந்த வரவு செலவு வருஷத்தில் ரூபாய்க்கு உ-தம்படி வீதமும் அடுத்த வரவு செலவு வருஷத்தில் ௪ தம்படி வீதமும் வரி.

(௧௦) இப்பொழுதுள்ள வருமான வரியில் அரைக்கால் பங்கு இந்த வரவு செலவு வருஷத்திலும் அடுத்த வரவு செலவு வருஷத்தில் கால் பங்கும் அதிகவரி.

### கலால் வரிகள் உயர்வு.

(௧௧) உப்பு உள்பட எல்லா கலால் வரிகளில் கால்பங்கு அதிகவரி.

### தபால் கட்டண உயர்வு.

(௧உ) இப்பொழுதுள்ள உள்நாட்டுத் தபால் கட்டணங்கள் ௧௦௦க்கு ௫௦ வீதம் உயர்த்தப்படும். அதாவது தபால் கவர்களுக்கு ௧௩ அணு வீதமும் கார்டுகளுக்கு ஒரு அணு வீதமும் கட்டணம் வசூலிக்கப்படும்.

### அமுலுக்குவரும் காலம்.

உப்பு உள்பட கலால் வரி உயர்வுகள் செப்டம்பர் மாதம் ௩௦-ந் தேதி காலையிலிருந்து அனுஷ்டானத்தில் வரும். தபால் கட்டணங்களில் உயர்வு இனிமேல் சபையுடன் கூடின கவர்னர் ஜெனரலால் நியமிக்கப்படக் கூடிய தேதியிலிருந்து அனுஷ்டானத்தில் வரும்.



# புதிய நிதி மசோதா.

## வரிகளையெல்லாம் உயர்த்த யோசனை.

## வைசிராய் சம்பளமும் குறைதல்.

## தபாற்கட்டணம் ஒன்றுக்கு ஒன்றரை.

### ஷுஸ்டர் பிரசங்கம்.

மேற்படி புதிய வரித்திட்ட வரவு செலவு மசோதாவைக் கொண்டுவர அனுமதி கோருமுன் சர்க்கார்ப் பொக்கிஷ உறுப்பினர் திரு. ஷுஸ்டர் பேசியதன் சாரமான சில பகுதிகள் வருமாறு:—

### வருமானக் குறைவு.

"கங்க இலாகா வருமான இனத்தில் ௫௦-கோடி குறைந்து விடுமென எதிர்பார்க்கப்படுகிறது. வருமான வரி இனத்தில் ௧௩-கோடி குறையுமென்றும் எதிர்பார்க்கப்படுகிறது. ரயில்வேப் போக்குவரத்து வருமானமும் குறைந்து விட்டது. அதில் சர்க்காருக்கு ௫-கோடியே ௬௫-லட்சம் நஷ்டம் ஏற்படுமெனத் தெரிகிறது. ஆகவே வரவு செலவுத் திட்டத்தில் எதிர்பார்த்தபடி ஒரு லட்சம் அதிகமாக வராமல், ௧௧-கோடி ௫௫-லட்சம் புதிதாகத் துண்டு விழும். அதோடு ௧௯௩உ-௩௩-ல் ௧௯-கோடி துண்டு விழும். இந்த இரண்டு தொகைகளும் ஒன்று சேர்ந்தால் ௩௯-கோடி ௫-லட்சமாகிறது. இதைச் சரிப்படுத்த ௪௫-மாதங்கள் தானிருக்கின்றன. அரசாங்கத்தார் இந்த நஷ்டத்தை ஈடு செய்யத் தங்கள் செலவைக் குறைத்துக் கொள்ளப் போகிறார்கள்; சம்பளத்தைக் குறைக்கப் போகிறார்கள்; புதிய வரிகளையும் விதிக்கப் போகிறார்கள்.

### சிக்கனம்.

"சிக்கனக் கமிட்டிகளின் வேலையை நான் பெரிதும் பாராட்டுகிறேன். விவில் இலாகாவில் உ-௫-கோடி சிக்கனம் செய்யப்படும். சேனைபதியும் மற்ற மூலிய ராணுவ உத்தியோகஸ்தர்களும் உதவியாக முன் வந்து ஒத்துழைத்ததையும் நான் பகிரங்கமாகப் பாராட்ட விரும்புகிறேன். அடுத்த வருஷம் சுமார் ௪௫-கோடி வரை ராணுவ இலாகாவில் சிக்கனம் செய்வதாக அதிகாரிகள் உறுதி கூறியிருக்கின்றனர். உத்தியோகஸ்தர்களின் சம்பளத்தைக் குறைக்க முன்னம் செய்யப்பட்ட யோசனையால் மீதமாகும் தொகையும், தருப்புகளைக் குறைப்பதால் மீதமாகும் தொகையும் இதில் சேர்ந்தவையல்ல. இவ்விஷயங்கள் ஏகாதிபத்தியப் பாதுகாப்புக் கமிட்டியால் பரிசீலனை செய்யப்பட்டு வருகின்றன. ராணுவ இலாகாக்காரர்களும், பொக்கிஷ இலாகாக்காரர்களும், இந்தியச் சட்டசபையிலுள்ள அங்கத்தினர்கள் சிலரும் நிதானமாகவும் கஷ்டப்படும் வேலை செய்ததின் பயனாக இரண்டு வருஷங்களில் ராணுவச் செலவு ௫௫-கோடியிலிருந்து ௪௯-கோடியே ௬௦-லட்சமாகக் குறைந்தது. இது ஒரு பெரிய காரியம்.

### சம்பளக் குறைவு.

"இந்திய அரசாங்கத்தாரும் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரும் உடனே உத்தியோகஸ்தர் சம்பளத்தைக் குறைப்பது அத்தியாவசியமென்ற அபிப்பிராயத்துடனிருக்கின்றனர். அடுத்த டிசம்பர் மாதம் முதலிலிருந்து சம்பளம் குறைக்கப்படும். ௧௯௩௩-ம் வருஷம் மார்ச்சு மாதம் வரை இவ்விதம் சம்பளம் குறைத்துக்கொடுக்கப்படும். அதன் பின் அப்போதுள்ள பொருளாதார நிலைமையை விசாரித்தறியாமல் அந்த ஏற்பாட்டை நிரந்தரமாக வைத்திருக்கமாட்டார்கள். இடையில் பொருளாதார நிலைமை சீர்ப்பட்டால் அரசாங்கத்தார் உடனே இந்த ஏற்பாட்டை மாற்றுவதைப் பற்றி யோசிப்பார்கள்.

### வைசிராய் சம்பளக் குறைவு.

"பொதுஜன நன்மையைக் கவனித்தால் எல்லா உத்தியோகஸ்தர்களுக்கும் ஒரே மாதிரியாகச் சம்பளத்தைக் குறைப்பதே சரியானதாக விருக்கும். ஒருவருக்கு நூற்றுக்கு ௧௦-வீதத்துக்கு அதிகமாகச் சம்பளம் குறைக்கப்படக் கூடாது. இதில் இப்போது அறிவிக்கப்பட்டுள்ள வருமான வரி உயர்வும் சேர்ந்ததே. பொதுவாக அரசாங்க ஊழியத்திலிருப்பவர்களில் சுமார் ௪௦-ரூபாய் சம்பளம் வாங்குபவர்களுக்கு இந்த ஏற்பாட்டால் கஷ்டமிருக்கக் கூடாது. இராஜப் பிரதிநிதி தமது சம்பளத்தில் நூற்றுக்கு உ௦-வீதம் குறைத்துக்கொள்ள இணங்கியிருக்கிறார். அவரது நிருவாக சபை அங்கத்தினர்கள் தங்கள் சம்பளத்தில் நூற்றுக்கு ௧௫-வீதம் குறைத்துக் கொள்வார்கள்.

### ஈடு கொடுக்கும் அளவு.

"சம்பளம் குறைக்கப்பட்டதால் ௮௩௦ லட்சம் கிடைக்கும். புதிய வரிகளாலும் மற்ற வருமானங்களாலும் உ௪ கோடி ௭௯ லட்சம் கிடைக்கும். இதனால் ௧௧ கோடி ௫௦ லட்சம் துண்டுவிழுமென முன்னம் எதிர்பார்த்தபோல் அடுத்த வருஷத்தில் செலவுக்குக் கண்டு ௫ கோடி ௨௯ லட்சம் மீதமாகும். பொருளாதார நிலை அபிவிருத்தியடைய வேண்டுமென்ற அவசியமுமில்லை. அப்போது முதன் முதலில் சம்பளம் குறைக்கப்பட்ட உத்தியோகஸ்தர்களுக்குப் பரிகாரம் தேடவேண்டும். பிறகு வருமானவரி விஷடமாகக் கஷ்டமடைந்தவர்களுக்குப் பரிகாரம் தேடவேண்டும்.

### இவை தற்காலிக ஏற்பாடே.

"௧௯௩௩-ம் வருஷம் மார்ச்சு மாதம் ௩௧-ம் தேதிக்குப் பிறகு எப்படியும் இந்தப் புது ஏற்பாடுகள் நீடிக்கா. அதிகச் செலவு செய்துவிட்டதால் இப்போது இந்தக் கஷ்டம் ஏற்பட்டதாகச் சொல்வதற்கில்லை. ஆனால் வரி விதிதத்தில் வருமென எதிர்பார்க்கப்பட்ட வருமானங்கள் சில குறைந்துவிட்டன. வியாபார கூஷீணிப்பால் பண வருவாய் குறைந்துவிட்டது. வரிவிதிக்க நாங்கள் கூறியிருக்கும் யோசனையைச் சிலர் குறை கூறுவார்கள் என்று எனக்குத் தெரியும். ஆனால் இங்குள்ளவர்களும் சரி வெளியிலிருப்பவர்களும் சரி, எங்களை அவசரப்பட்டு அநியாயமாகக் குறை கூறாமலிருக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்."

### அங்கத்தினர் எதிர்ப்பு.

மேற்கூறியவாறு பேசியபின், தமது புதிய வரவு செலவு மசோதாவைக் கொண்டுவர அவர் அனுமதி கோரினர். ஸர் ஹரி சிங் கவர் முதலியோர் அனுமதிக்கலாதென ஆட்சேபித்தார்கள். திரு. ஆர்த்தர்மூர் முதலிய சிலர் அனுமதியை ஆதரித்தனர். ஜனாப் யாமீன் கான் மசோதாவை இப்பொழுது கொண்டுவந்துவிட்டு நவம்பர் மாதத்தில் டில்லியில் விசேஷக்கூட்ட மொன்றைக் கூட்டி இதைப்பற்றி விவாதிக்கலாம் என்று யோசனை கூறினர்.

### ஷுஸ்டர் பதில்.

இறுதியில் திரு. ஷுஸ்டர் கூறிய பதிலின் சாரமாவது:—

"நவம்பர் மாத ஆரம்பத்தில் இம்மசோதாவைப்பற்றி ஆலோசிக்கத் தனிக்கூட்டம் கூட்டவேண்டுமென்ற யோசனையை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். சிக்கனக் கமிட்டிச் சிபார்சுகளைப் பரிசீலனை செய்யாமல் அப்படியே எல்லாவற்றையும் அங்கீகரிப்பதென்பது கஷ்டந்தான். டில்லியில் நவம்பர் மாதத்தில் இச்சபை மீண்டும் கூடுவதற்குள் எல்லாக்கமிட்டிகளின் ரிபோர்ட்டுகளும் தயாராகிவிடும். அப்போது இன்னும் அதிகச் சிக்கனம் செய்வதற்கு இடமுண்டாகும். என்னைப்போல் இந்த வரி விதித யோசனைகளை வெறுப்பவர்கள் வேறெவரும் இருக்கமாட்டார்கள் என்றே நம்புகிறேன். ஆனால் இந்த நிலைமையைச் சிக்கனத்தால் மட்டும் சமாளிக்க முடியவில்லை. ராணுவச் செலவை ஆறுவாரத்துக்குள் குறைத்துவிட முடியுமென ஸர் ஹரிசிங் கவர் கூறியது மிகப் பரிகாசமாக விருக்கிறது. இந்தச் சட்டசபை பொறுப்பற்ற விதமாக நடந்து கொண்டால் வெளியிலிருப்பவர்கள் என்ன நினைப்பார்கள் என்பதை இச்சபையினர் யோசிக்க வேண்டும். இப்போதே சர்க்காரின் வேலை கஷ்டமாக விருக்கிறது. இன்னும் அதை அதிகக் கஷ்டமாக்க வேண்டாமென, இந்தியாவின் க்ஷேமத்தில் கருத்துக்கொண்டவர்களில் ஒருவன் என்ற முறையில் நான் கேட்டுக் கொள்ளுகிறேன்."

### அனுமதிக்கப்பட்டது.

வரவு செலவு மசோதாவைக் கொண்டுவர அதன்பின் அனுமதி கொடுக்கப்பட்டது. அதற்குச் சாதகமாக ௫௭ பேரும் பாதகமாக ௪௯ பேரும் ஓட்டுக்கொடுத்தனர். இம்மசோதாவைப்பற்றிய ஆலோசனை டில்லியில் நவம்பர் மாதந்தான் நடக்கும்.

### மகாத்மா அபிப்பிராயம்.

புதிய வரிகளைப்பற்றி மகாத்மா காந்தி பின்வரும் அபிப்பிராயத்தைத் தெரிவித்தார்:—

"நான் தொலைவிலிருப்பதால் உப வரவு செலவுத் திட்டத்தின் பலாபலன்களை அறிந்து கொள்ள முடியவில்லை. இருந்தாலும் ஏழைகளுடைய உப்பின் மேலும் அதிக வரியை விதித்திருப்பது நான் திடுக்கிடும்படிச் செய்து விட்டது. காங்கிரஸ் இதையும் எதிர்த்துப் போராடுமென்பதை நான் அறிவேன். வரவு செலவுத் திட்டத்தைச் சரிக்கட்டிக் கொள்ளுவதற்குப் புதிய வரிகளை விதிப்பது மார்க்கமில்லை, ராணுவ வழியில் செலவுகளையே பெருவாரியாகக் குறைக்கவேண்டும். ராஜப்பிரதிநிதி வலுவிலேயே தம்முடைய சம்பளத்தைக் குறைத்துக் கொண்டிருப்பதை நான் பாராட்டுகிறேன். ஆனால் இந்தியா உண்மையில் சுய ஆட்சியால் அனுகூலமடைய வேண்டுமானால் பெருவாரியாகச் சம்பளங்களைக் குறைக்க வேண்டும்."







# இங்கிலாந்தில் மகாத்மா.

## லங்காஷயருக்கு விஜயம்.

## லண்டனில் காந்தி ஜயந்தி.

### இர்வின்-காந்தி சம்பாஷணை.

லண்டனில் மகாத்மா காந்தியும் மாஜி இந்திய வைசிராய் இர்வின் பிரபுவும் செப்டம்பர் உகூ-உ அந்தரங்கமாகச் சந்தித்துப் பேசிக்கொண்டிருந்தார்கள். பின்னர் முகம்மது ஷாபியுடனும் மாஜி வைசிராய் பேசிக்கொண்டிருந்தார். இச்சம்பாஷணைகளின் விபரம் மிக அந்தரங்கமாக வைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் அதன் போக்கு இர்வின் பிரபுவுக்குக் கவலையை உண்டாக்கியிருப்பதாகவும் பிரிட்டிஷ் சர்க்கார் தங்கள் கொள்கையைத் திட்டமாக வெளியிடாவிட்டால், மகாத்மா மகா நாட்டை விட்டு விலகி விடக் கூடுமென அவர் அஞ்சுவதாகவும் தெரிகிறது.

### லங்காஷயர்ப் பிரயாணம்.

மகாத்மா உகூ-உ இரவு லங்காஷயர் போய்ச் சேர்ந்தார். அங்கு அவர் மிக அன்புடன் தொழிலாளர்களாலும், முதலாளிகளாலும் வரவேற்கப்பட்டார்.

### இந்தியாவில் தங்கியிருந்தார்.

காந்திஜி உகூ-உ இந்தியாவிலேயே இருந்தார். ஆனால் அவர் சொந்த இந்தியாவுக்கும் இந்த இந்தியாவுக்கும் வித்தியாசமுண்டு. அவர் இன்று தங்கியிருக்கும் ஜில்லா லங்காஷயரில் சகஜமாக இந்தியா வென்று தான் வழங்கப்படுகிறது. ஏனெனில் இந்த ஜில்லா பெரும்பாலும் இந்திய மார்க்கெட்டுக்கே சப்ளை செய்து வந்திருக்கிறது. கடுமையான பிரயாணத்துக்குப் பின் காந்திஜி ஸ்பிரிங்வெல் போய்ச் சேர்ந்தார். ஸ்பிரிங்வெல்லென்பது டார்வனிக்குச் சமீபத்தில் வளம்பொருந்திய கிராமமாகும். காந்திஜி பகலில் கடுமையாக வேலை செய்திருந்தபடியால் இரவில் வண்டியில் அயர்ந்து தூங்கினர். ஸ்டாக்போர்ட்டிலும், மாஞ்செஸ்டரிலுமாக இரு முறைகள் அவர் வண்டியில் எழுப்பப்பட்டார். அங்கு கூடியிருந்த கூட்டங்கள் அவரைத் தரிசிக்க விரும்பின. அவர்களில் பல பத்திரிகை நிருபர்களும் இரவில் புகைப்படம் பிடிப்பவர்களும் கூடியிருந்தனர். காந்திஜி ஸ்பிரிங்வெல் போனதும் மாடல்குடிசைக்கு மோட்டாரில் சென்றார். வழியில் உற்சாகத்துடனும் அதிசயத்துடனும் ஜனக்கூட்டம் கூடியிருந்தது. அதற்கப்படியாக நிறுத்தப்பட்டிருந்த போலீசார் இந்த ஜனக்கூட்டத்தை வரிசையாக உள்ளடக்கி வைத்திருந்தனர். கூட்டத்தில் ஸ்திரீகள் அதிகம் காணப்பட்டார்.

### மனம் விட்ட சம்பாஷணை.

மகாத்மா லங்காஷரில் முதலாளிகளுடனும் தொழிலாளருடனும் அன்புடன் சம்பாஷணைகள் புரிந்தார். அவர்கள் தங்கள் நிலைமையை எடுத்துக் கூறி வியாபாரம் மீண்டும் ஆரம்பிக்குமாறு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். காந்திஜி கவனமாக இதைக்கேட்டுக்கொண்டு வந்து பிறகு பதிலளித்தார். இங்கிலாந்தில் அரசாங்க உதவியை உதவி பெற்று வேலையில்லாமலிருப்பவர்களை விட மிகவும் கேவலமான நிலைமையில் இந்தியாவில் கோடிக்கணக்கான ஜனங்களிருக்கின்றனரென்றும், கிராமத்தினர் தங்களுக்கு வேண்டியதைப் பூர்த்தி செய்து கொள்வதற்கான பிழைப்பு முறையை யடைய வேண்டுமென்ற கொள்கையையே தாம் மேற்கொண்டு பின்பற்ற வேண்டியதாகவிருக்கிற தென்றும், அரசியல் ஏற்பாடு முழுதும் அந்தஸ்தில் செய்யப்படும் பட்சத்தில் பிரிட்டிஷ் சாக்கிற்கு சலுகை காட்டப்படுமாறு தாம் செய்யக்கூடுமென்றும் ஆனால் அது பழைய வியாபாரத்தை அப்படியே புதுப்பிப்பதாக ஆகாதென்றும் தாம் தமது கொள்கையை உறுதியாகப் பின்பற்றத் தீர்மானித்திருப்பதாகவும் காந்திஜி பதிலளித்தார்.

### பகிஷ்காரத்தால் லங்காஷயர் பாதிக்கப்பட்ட அளவு.

இந்தியாவின் லங்காஷயர் வியாபாரத்தில் ஏற்பட்டுள்ள நஷ்டத்தைப் பற்றிய புள்ளி விபரம் காந்திஜி கோஷ்டியினருடன் உ௭-உ மாலை தொழில் சம்பந்தப்பட்டவர்களால் விவாதிக்கப்பட்டது. காந்திஜி பேசுகையில் பகிஷ்காரம் ஆரம்பிக்கப்படும் முன்னரே அதாவது ௧௯௨௯-ம் வருஷத்தில் இந்திய வியாபாரம் லங்காஷயர் மொத்த உற்பத்தியில் ௧௦௦-க்கு ௧௫ விகிதம் தானிருந்த தென்றும், பகிஷ்காரத்தினால் ௧௦௦-க்கு ௩ விகிதமே இந்த வியாபாரம் குறைந்திருக்கிற தென்றும், காந்திஜி சொன்னார். ஆனால் பருத்தித் தொழிலில் சம்பந்தப்பட்டவர்கள் லங்காஷயர் யுத்த காலத்திற்கு முன்னிருந்த தனது வியாபாரத்தில் முக்கால் பாகத்தை இப்பொழுது இழந்து விட்டதெனக் கூறினர். ௧௯௨௩-ம் வருஷத்தை ஒப்பிட்டுப் பார்க்க சகஜமான வருஷமாக எடுத்துக் கொள்ளலாமாவென்பதைப்பற்றி விவாதம் நடைபெற்றது. இவ்வருஷத்தையே யெடுத்துக்கொள்ள வேண்டுமென்பது காந்திஜியின் அபிப்பிராயமாகும்.

### ஜனங்களின் ஆழ்ந்த அன்பு.

மகாத்மா லங்காஷயர் ஜனங்கள் தம்மிடம் காட்டிய அன்பைக் குறித்துக் கூறியதாவது:—"லங்காஷயர் தொழிலாளர் என்னிடம் மரியாதையையே காட்டுவார்களென நான் எதிர் பார்த்திருந்தேன். ஆனால் என்னிடம் ஒரு ஆழ்ந்த அன்பு கொண்டிருப்பார்களென்பதை நான் எதிர் பார்த்ததில்லை. நேற்று தெருக்களில் ஜனங்கள் தாங்களாக உற்சாகத்துடன் கூடி வரிசையாக நின்றதிலிருந்து இது ஏற்படுகிறது. இந்த அன்பை எனது வாழ் நாளில் நேர்ந்த ஒரு பெரிய விஷயமாக நான் என்றும் ஞாபகத்திலிருத்துவேன். மிகுந்த அன்பும் ஆதரவும் தவிர வேறு உணர்ச்சி யிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. சிநேக தோரணையில் நான் சம்பாஷணை நடத்தியிருக்கிறேன். லங்காஷயர் கஷ்டத்தை ஒருவாறு உணர்ந்திருக்கிறேன். ஜனங்களின் கஷ்டத்திலேயே எனது மனது ஊன்றியிருக்கின்றது. எந்த அளவுக்கு இந்தியா இதில் உதவிபுரியக்கூடுமென்பதை நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். வேலையில்லாக் கஷ்டம் இவ்வளவு பெருவாரியாக விருப்பதுபற்றி நான் மிகுந்த வருத்தமடைகிறேன். இதில் இந்தியாவின் உதவி யேற்பட்டால் கூட அது ஒரு பாகத்தைத் தான் சீர்திருத்தக் கூடும் போலிருக்கிறது. இந்தியப் பகிஷ்காரத்தை விட உலகப் பொருளாதாரக் கஷ்டமே இதற்கு அதிகக் காரணமெனத் தெரிகிறது. பகிஷ்காரம் மூலம் ௧௦௦-க்கு ௩ விகிதமே நஷ்டமேற்பட்டிருக்கிறது. இப்பொழுதுள்ள கஷ்டத்தை நிவர்த்திக்க வேறு வழிகளை நான் கூறுவதானது அதிகப் பிரசங்கமாகும். சென்ற இரண்டு தினங்களில் நான் முதலாளிகளையும் தொழிலாளரையும் கண்டு பேசியதிலிருந்து அவர்கள் கஷ்டத்தை வெகு தைரியமாக ஏற்றுக்கொண்டிருக்கின்றனரென ஏற்படுகிறது. இந்தியா விஷயத்தில் அவர்கள் எவ்வித குரோத புத்தியும் காட்டாதது எனக்கு மிகுந்த திருப்தியை யளித்திருக்கிறது. இது நல்ல சகுனமேயாகும்."

### லண்டனுக்குத் திரும்பினர்.

லங்காஷயரிலிருந்து மகாத்மா உ௮-உ திங்கட்கிழமை லண்டனுக்குப் புறப்பட்டார். காந்திஜி களைத்தவர் போலவே காணப்பட்டார். இருப்பினும் பிளாட்பாரத்திலிருந்த பொழுது அவர் தம் காரியதரிசிக்கு ஓயாது எழுதிக் காட்டிக்கொண்டேயிருந்தார். இவரைப் பார்க்க அங்குக் கூடியிருந்த ஜனங்கள் இதை வெகு அதிசயத்துடன் பார்த்து வந்தனர். காந்திஜி மௌன தினரீதியைப்பற்றி அவர்கள் முதன் முதல் இப்பொழுதுதான் நேரில் கவனிக்க நேர்ந்தது. காந்திஜி கோஷ்டியில் மிஸ் மீரா பென்னும் திரு. மகாதேவ தேசாயும் காணப்பட்டனர். கூட்டுக்கமிட்டித் தலைவர் மிஸ்டர் ஹாரிஸ் ஸ்டேஷனுக்கு வந்து காந்திஜியை வழியனுப்பினர்.

### மோட்டார் டிரைவர் வியப்பு.

காந்திஜி லங்காஷயரிலிருந்து லண்டன் திரும்பியபொழுது காந்திஜியைக் கூட்டத்தினின்றும் விடுவித்துச் சௌகரியமாக அழைத்துச்செல்ல விசேஷப் போலீஸ் கோஷ்டி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆனால் இவ்வேலைபோலீஸாருக்கு மிகச்சுலபமாகப் போய்விட்டது. விடியற்காலை ௫-மணிக்கு நள்ளிருட்டில் யூஸ்டன் ஸ்டேஷனில் காந்திஜி தமது கோஷ்டியுடன் வண்டியை விட்டிறங்கினர். அங்கு அவரை வரவேற்கவென யாரும் வரவில்லை. ஆனால் குளிரில் அடிபட்டுச் சங்கடப்பட்டவாடகை மோட்டார் டிரைவர் ஒருவன், ஆடையால் போர்த்தப்படாத காந்திஜியின் வெறும் கைகளையும் கால்களையும் பார்த்துவிட்டு "பலே! மனோவுறுதி யென்றால் இதுவல்லவோ மனோவுறுதி" யென உற்சாகத்துடன உரக்க கூவினன்.

### "லண்டனில் அரைத்துணி உடுத்தல் முட்டாள்தனமாகும்."

லண்டனில் மகாத்மாவுக்கு செப்டம்பர் மாதம் ௩௦-ந் தேதி மாணவர் நடத்திய உபசாரத்தில், கராச்சித் தீர்மானம் லாகூர்த் தீர்மானத்திற்கு விரோதமாக விருப்பதாகக் கூறியதற்குச் சமபங்காளித்துவமே தமது நோக்கமென விளக்கியுரைத்தார். இங்கிலாந்திலுள்ள இந்திய மாணவர்கள் ஐரோப்பிய உடைதரிக்க வேண்டுமென்று காந்திஜி ஒரு கேள்விக்குப் பதில் கூறியது மிகுந்த சிரிப்பை யுண்டுபண்ணியது. அரைத் துணி உடுத்துவது முட்டாள்தனமாகுமென்றும் துணியின்றித் தவிக்கும் கோடிக்கணக்கானவர்களின் பிரதிநிதியாகவே தாம் அரைத் துணியுடனிருப்பதாயும், லண்டன் ஈஸ்டு எண்டிலும் லங்காஷயரிலும் தம்மிடம் காட்டப்பட்ட மிகுந்த அன்பிலிருந்து தாம் இங்கிலாந்துக்கு வந்தது நியாயமென்று ஏற்பட்டு விட்டதாயும் இனிமேல் வெற்றியேற்படாமற் போய்விட்டாலும் இப்போது நடந்தவற்றிலிருந்து ராஜி யேற்படுமென்று தமக்கு நம்பிக்கை பலப்பட்டிருப்பதாயும் கூறினர்.

### பிற அலுவல்கள்.

மகாத்மா காந்தி ஐக்கிய அரசியலமைப்புக் கமிட்டியின் அலுவல்களிலும் சிறுபான்மைக் கமிட்டி விஷயங்களிலும் மிகுந்த பங்கு எடுத்து உழைத்துவருகிறார். செப்டம்பர்மீ ௩௦உ பிரதம மந்திரியைக்கண்டு பேசினர். அக்டோபர்மீ க-உ மகாத்மா பிறந்ததினத்திற்கு முதல் நாளாகையால், லண்டன் இந்தியர் அவருக்கு ௫௦-பவுன் அடங்கிய பண முடிப்பு ஒன்று அளித்தார்கள். அக்கூட்டத்தில் இந்தியப் பொது உடைமைக் கட்சியாளர் அடிக்கடி குறுக்கிட்டுக் காந்திஜியின் பிரசங்கத்தைத் தடை செய்தனர். ஆனால் இறுதியில் அவர்கள் வெளியேற்றப்பட்டனர். அக்டோபர் க-உ மாலை தொழிற்கட்சியின் தற்பொழுதைய தலைவரான திரு. ஹெண்டர்ஸனை மகாத்மா சந்தித்து, அவருடன் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தார்.

### லண்டனில் காந்தி ஜயந்தி.

அக்டோபர்மீ உ௨ இங்கிலாந்து "சுயேச்சைத் தொழிற்கட்சி, காந்தி சங்கம், காங்கிரஸ் லீக் முதலியவை மகாத்மா பிறந்ததினத்தைக் கொண்டாடி, ஓர் பழச் சிற்றுண்டி நடத்தின. பல கட்சியாரும் அடங்கிய பெருங் கூட்டம் அதற்கு வந்திருந்தது. அநேகம் பார்லிமெண்டு உறுப்பினரும் வந்திருந்தனர். திரு. தாரா அவர்கள் உபசாரப்பத்திரம் ஒன்று படித்தளித்தார். வந்திருந்தோர் சார்பாக திரு. பூரி அவர்கள் மகாத்மாவுக்கு ஓர் இராட்டினத்தைப் பரிசளித்தார். மிஸ்டர் பென்னர் பிராக்வே கூட்டத்திற்குத் தலைமை வகித்துப் பேசுகையில் "என்ன நேரிடினும் நாங்கள் காங்கிரஸைத் தாங்கி நின்று இந்தியாவின் சுயேச்சையை ஆதரிப்போம்" என்று கூறினர்.

### "எங்கள் இரத்தத்தைக் கங்கையெனப் பெருக்குவோம்."

மகாத்மா இவ்விருந்துக் கூட்டத்தில் பதிலளிக்கையில் கூறியதாவது:—"மகா நாட்டைப்பற்றி நான் வீண் நம்பிக்கை கொண்டு விடவில்லை. வானம் கருத்திருக்கிறது. ஆனால் நாங்கள் மீண்டும் போராடத் தயாராயிருக்கிறோம். அவசியமானால் எங்கள் ரத்தம் கங்கையெனப் பிரவாகமாக ஓடுமாறு செய்வோம். ஆயினும் நாங்கள் எதிர்த்துப் போராடுகிறவர்களுக்கு ஹிம்சை செய்யமாட்டோம்; உங்களுடைய கஷ்டங்களையும் இந்தியாவுக்காக நீங்கள் செய்திருக்கும் தியாகங்களையும்நானறிவேன். நீங்கள் இந்தியசுயேச்சையை ஆதரித்து வந்தால் இன்னும் பெரிய தியாகங்களைச் செய்யவேண்டியிருக்கும். காங்கிரஸ் நிட்டத்தில் உங்கள் நம்பிக்கையை ஊர்ஜிதம் செய்ததின் மூலம் நீங்கள் என் பளுவைக் குறைத்துவிட்டீர்கள். இங்கு இந்தியாவைப்பற்றி அறியாமை அதிகமாயிருந்த போதிலும் இந்தியாவின் லட்சியம் உங்கள் கையில் பத்திரமாயிருக்கிறது. நான் லண்டனுக்கு வந்ததுமுதல் சிநேகத்தையும் உண்மையான அன்பையும் தவிர வேறெதையும் நான் காணவில்லை."

மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெறும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பார தத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் தலைமேற் கொண்டேன்.

ஊழியன் காரைக்குடி
பிரசோற்பத்தி-ஸ்ரீ புரட்டாசி-மீ உ௰-உ

## வரிகள் உயர்வு.

இந்தியச் சட்டசபையில் சென்ற வாரம் சர்க்கார் நிதி மெம்பர் கொணர்ந்திருக்கும் அவசர வரவுசெலவுத் திட்ட மசோதா நாடு முழுவதும் பெருங் கவலையை உண்டாக்கிவிட்டதெனில் மிகையாகாது. நாட்டின் வரவு செலவுத் திட்டத்திலே குறை விழலாகாது என்பதை யாரும் மறுக்கார். குறை விழச் செய்துகொண்டே யிருந்தால் நாட்டின் நாணயம் போய்விடும் என்பது உண்மைதான். ஆனால் வரவு செலவைச் சரிப்படுத்த நிதி மெம்பர் கைக்கொண்டுள்ள யோசனைகள் மிகவும் வருந்தத் தக்கவையா யிருக்கின்றன.

நடைமுதல் வருஷத்தில் பத்தொன்பதரைக் கோடி ரூபாய் துண்டுவிழுவதாக நிதி மெம்பர் கணக்கெடுத் திருக்கிறார். இதனைச் சமாளிக்க அவர் உத்தேசித்துள்ள நெறிகள் யாவை? உலகின் தற்பொழுதையப் பொருளாதார நிலைமையை நோக்க, அடுத்த வருடத்தில் இதனினும் எவ்வித அபிவிருத்தியும் ஏற்படுமென எதிர்பார்க்க இடமில்லை. ஆதலால் இப்பொழுது விழும் குறை ஒரளவு நிரந்தரமாக விருக்கக்கூடியதென்றே கருத வேண்டும். எனவே, இதற்கு ஈடு செய்ய என்ன வழி? முக்கியமாக நிதி மெம்பர் வரிகளுக்குமேல் வரிகளைக் குவிக்கிறார். இப்பொழுது உயர்த்தப்படும் வரிகளை இனிக்குறைக்க முடியாதென்றே கொள்ள வேண்டும். கஉ-கோடி ரூபாய் வரிகளை, ஏற்கனவே வரிச்சுமை தாள முடியாது திணறும் ஏழை இந்தியாவின்மீது பின்னும் சுமத்துதல், வரி செலுத்துவோரை மீளாச் சங்கடத்தில் விழ்த்துவதாகுமன்றோ?

வருமானவரி சமீபத்தில்தான் உயர்த்தப்பட்டது. அப்பொழுது அதுவே மிகப் பலத்த கண்டனத்தை எழுப்பியது. இப்பொழுது அது இன்னும் உயர்த்தப்படுவதுடன், ஆயிர ரூபாய்க்கும் இப்பொழுது வரி விதிக்கப்படுகிறது. இறக்குமதி வரிகளும் கண்ணை மூடிக்கொண்டு உயர்த்தப்படுகின்றன. சமீபத்தில் பிரிட்டனின் தங்க மதிப்பு நாணயச் செலாவணி முறை ஆற்றோடு போனதால், விலைகள் உயர்ந்து வருகின்றன. அது எக்கதிக்குக் கொண்டு போய்ச் சேர்க்கப் போகின்றதோ என்பது தெரியாத இருள் ஏற்பட்டிருக்கையில், இறக்குமதி வரிகள் மித மிஞ்சிய அளவுக்கு உயர்த்தப்பட்டு விட்டன. இறக்குமதி வரிகள் நாட்டின் தொழிலுக்குப் பாதுகாப்பாக உதவும் என்று சொல்வதற்கில்லை. நாட்டின் தொழிலுக்குப் பாதுகாப்பாயின், இறக்குமதியாகும் இயந்திரங்களுக்கும் வரியை உயர்த்துவானேன்?

எல்லாரும் தியாகம் செய்யவேண்டுமென்று உபதேசம் செய்கிறார் நிதி மெம்பர். ராஜப்பிரதிநிதி தம் சம்பளத்தில் நூற்றுக்கு உ௰-வீதம் குறைத்துக் கொண்டதும், நிர்வாக உறுப்பினர்கள் நூற்றுக்கு கறு தங்கள் சம்பளத்தில் குறைத்துக்கொள்ள இசைந்ததும் ஓரளவு சந்தோஷத்துக்கு உரியது தான். ஆனால் பிற நாடுகளின் உயர் பதவி நிர்வாகிகளது சம்பள விகிதங்களையும், நமது நாட்டு உயர்பதவியாளர் சம்பள விகிதங்களையும் ஒப்பிட்டுப் பார்க்க அவை மலைக்கும் மடுவுக்கு மாயிருப்பது புலப்படுங்கால் உண்டாகும் பெருந் துக்கத்தினிடையே, இக் களிப்பு மாயமாய் மறைந்துபோய் விடுகின்றது.

பிற உத்தியோகஸ்தர் சம்பளக் குறைவை நோக்கும் பொழுது, நிதி மெம்பரின் ஓர் நியாயமற்ற காரியம் நம் மனத்தை உறுத்துகின்றது. மாதம் நாற்பதுக்கு மேற்பட்ட சம்பளமுடைய உத்தியோகஸ்தர் சம்பளத்தி லெல்லாம், உயர்த்தப்பட்ட வரியுமுள்பட நூற்றுக்கு பத்துக்குக் குறைக்கப் படுமாம். இவ்வாறுயின், யாவரும் சமமாகத் தியாகம் செய்யவேண்டும் என்ற நிதிமெம்பர் உபதேசம் காற்றில் பறந்து போகின்றதன்றோ? சிறு சம்பளங்களுடைய எளிய உத்தியோகஸ்தருக்கு வருமானவரி கிடையாது. எனவே, நூற்றுக்குப் பத்தை அவர்கள் முழுமையும் இழக்கின்றார்கள். பெரும் சம்பளக்காரர், சம்பளம் குறையினும் குறையாவிடினும், பிறரைப் போலவே உயர்த்தப்பட்ட வருமான வரியைச் செலுத்தவேண்டியவரே யாவார். எனவே, உயர்த்தப்பட்ட வருமானவரியுள்பட அவர் நூற்றுக்குப் பத்துக் குறையச் சம்பளம் பெறுவார் எனில், உண்மையில் நூற்றுக்கு நாலோ அன்றிச் சற்றேறக் குறையவோதான் அவர் சம்பளம் குறையும். இது என்ன நீதி?

தபால் கட்டணங்களை உயர்த்துதல் ஏழைகள், வியாபாரி, கைத்தொழில் செய்வோர், கடுத்தரவகுப்பினர் ஆகிய யாவர் மடியிலும் கையைப் போடுவதாகும். அதோடு, தபாற் கட்டணங்களை இவ்வாறு உயர்த்துவதால், வருமானம் அதிகமாகுமா அல்லது குறைந்துதான் போகுமோ என்பதே சந்தேகமாகும். ஏனெனில், எடை விதிப்பது போன்ற ஒன்றுக்கு ஒன்றாயான தபாற் கட்டணங்கள், கடிதப் போக்குவரத்தையே நெருக்கிக் குறைத்துவிடவுங் கூடும். கடிதத்தில் பேனாவால் எழுதிக் கணக்குப் போட்டு விடுவதால், இத்தகைய வரிகள் மதிப்புக்கு அகப்பட்டு விடா. ஜனங்களிடையே இவை எத்தகைய பயன்களை உண்டாக்கும் என்பதையும் நோக்குதல் வேண்டும்.

இவ்வாறாக, பின் எப்படித்தான் இவ் வரவு செலவைச் சீர் செய்வது என்ற கேள்வி பிறக்கலாம். துணிக்கேற்ற சட்டைதான் தைக்க முடியும்; வரவுக்கேற்ற செலவைத்தான் செய்ய வேண்டும். இந்தியாவில் சர்க்கார் செய்யும் செலவுகள், யுத்த காலத்தில் பிற நாடுகள் செய்யும் செலவுகளைப் போல் அவ்வளவு அதிகமாயிருக்கின்றன. கடுஞ் சிக்கனத்தைக் கையாளுதல்தான், இப்பொழுதுள்ள ஒரே வழி. ஆண்டுதோறும் பதினறுகோடி. கடனுக்கு அழப்படுகின்றது. ஏன் கடன் தொலைய வில்லை? திரும்பத் திரும்பக் கடனை வாங்கிக் கொண்டே வந்து, வட்டி விகிதத்தையும் உயர்த்திச் சென்றால், கடன் எழவு என்றுதான் மாளும்? ராணுவத்துக்கு ருகூ கோடியே அக லட்சமாக விருந்த செலவு ருச கோடியே ருடு லட்சமாகக் குறைந்ததெனக் களிகூர்கிறார் நிதி மெம்பர். இந்தியாவின் ராணுவச் செலவு விகிதம் மிக அக்கிரமமானது என்று நிபுணர்களெல்லாம் கூறவில்லையா? மேலும் இச் செலவில் பெரும்பகுதி நியாயப்படி பிரிட்டனால் தாங்கிக்கொள்ளப்பட வேண்டுமென்றும் பல சிறந்த நியாய வாதிகள் புகலவில்லையா? நமது ஸிவில் நிர்வாகம் சென்ற பத்து ஆண்டில் கஉ கோடி ரூபாய் உயர்ந்துவிட்டது. இவற்றையெல்லாம் நோக்கி, நிதி மெம்பர் நேரிய சிக்கனத்தைக் கைக் கொள்ளலன்றோ முறை? இன்னும் காலந்தாழ்த்துப் போகவில்லை. அரசாங்கத்தார் இப்பொழுதேனும் ஆற அமர யோசித்துத் தாங்கள் கைக் கொண்ட நாட்டுக்குப் போபத்தான நடவடிக்கையைக் கைவிட்டு, நேரிய நெறியினைக் கடைப் பிடிப்பாராயின் நலமாகும் என்பதே நம் கருத்து.

## இடி முழக்கம்.

### காந்தி விழா.

மகாத்மா காந்தியடிகளின் கூடு-வது பிறந்தினக் கொண்டாட்ட வாரம் உ—௰—௩௧ ஆரம்பமாகி நடைபெற்று வருகிறது. இவ்வாரத்தில் அடிகள் பால் அன்புகொண்ட பாரத மக்களாகிய நமது கடமை என்ன? மகாத்மாவின் படத்திற்கு அர்ச்சனையும் ஆராதனையும் அலங்காரமும் வைபவங்களும் மட்டும் செய்வதா? இல்லை. தமிழ்நாட்டுக் காங்கிரஸ் சபைத்தலைவர் திரு ச. இராஜகோபாலாச்சாரியாரவர்கள் பத்திரிகைகளில் வெளியிட்டுள்ளவாறு, காந்தியடிகளின் உள்ளத்தை மகிழச் செய்யும் வேலைகளை அதி தீவிரமாகச் செய்வதேயாகும். காந்தியடிகளின் உளத்தைக் குளிரச் செய்வதெவை? ஏழைகளைக் கொல்லும் அயலாடைகளை ஒழித்து அவர்களுக்கு கஞ்சிவார்க்கும் கதரை ஆதரித்தல். இதற்காக, ஏராளமான கதர் விற்பனை செய்ய முயலுவதோடு அந்நிய துணி ஒரு அங்குலம் கூட விற்காது செய்ய காட்டன்பர்கள் ஒவ்வொருவரும் முன்வர வேண்டும். இது அந்நிய ஜவுளி மறியலை அதி தீவிரமாகச் செய்வதாலேயே இயலும். சென்ற ஐந்து மாத காலமாக வெற்றிகரமாக நடந்து வந்த அந்நிய ஜவுளிக் கடை மறியல் தற்பொழுது சோர்ந்திருக்கிறதென்பதை அறிய விசனிக்கிறோம். இது நாம் காந்தியடிகளின் கட்டளைப்படி நடக்கப் பின்வாங்கி விட்டோம் என்பதை யல்லவா காட்டுகின்றது? ஆதலால் எல்லோரும் தொண்டர்களாகச் சேர்ந்து மறியலை தீவிரமாக நடத்த வேண்டும். அதோடு ஏழைகளின் குடும்பத்தை அழித்துப் பாழ்படுத்தும் கள்ளாக்கனை ஒழித்தல் வேண்டும். தீண்டாமை அகற்றவும் முற்பட வேண்டும். இவற்றையே மகாத்மா விரும்புகின்றார். இவையே அவர் கட்டளையாகும். எனவே இவற்றை நிறைவேற்றுவதே நாம் அடிகளுக்கு அளிக்கும் உயர் பரிசு- ஆராதனை-அர்ச்சனை காந்தி வாரத்தில் இவற்றை பாரத மக்கள் நிறைவேற்றுவார்களாக.

### சர்க்கார் பிடிவாதம்.

நாட்டிலே எவ்வளவு பலத்த கண்டனம் எழுந்தும், சர்க்கார் மிகப் பிடிவாதமாகப் புதிய அச்சுச் சட்டத்தை நிறைவேற்றி விட்டார்கள். தனிக் கமிட்டியில் சில திருத்தங்கள் செய்யப்பட்டன என்பது உண்மை தான். மேலெழுந்த வாரியாகப் பார்ப்போர்க்கு அவை, புதிய சட்டத்தின் கொடுமையைக் குறைத்து விட்டன போல் தோன்றும். ஆனால், நீதி ஸ்தலத்தின் அதிகாரத்தை நிர்வாக அதிகாரிகள் பெறும் அநியாய தத்துவம் மாறவில்லை. மேலும், புதிய அச்சுச் சட்டத்தின் ஒரு பெருந் தீமையை இவ் வார "இளமை இந்தியா"வின் தலையங்கத்தில் திரு. ராஜகோபாலாச்சாரியார் மிக நன்றாக எடுத்துக்காட்டி யிருக்கிறார். போலீஸார் நேரே வழக்குத் தொடரக் கூடிய அற்பக் குற்றத்தைத் தூண்டுவதாகப் பொருள் கற்பிக்கத் தக்க எழுத்தைப் பத்திரிகையில் காணினும் கூட, அப்பத்திரிகை பெருந் தொகையை இழக்கவேண்டியதாயிருக்கிறது. ஸர் எச். எஸ். கவர் கூறியவாறு போரசிரியர் கார்லைலிலும் இந்தியர் புனித நூலாகிய பகவத் கீதையுங் கூட இச்சட்டத்தின்படி குற்றத்திற்காளாகும். இத்தகைய சட்டத்தை இச்சமயம், இந்திய சர்க்கார் பிடிவாதமாக நிறைவேற்றியது மிக மிகக் கண்டிக்கத் தக்கதாகும்.

## உள்ளூர்.

| | |
|---|---|
| செய்கோன் வட்டம் | உ-அ-0 |
| சிங்கப்பூர் வட்டம் | உ-0-0 |
| பினங்கு | உ-0-0 |
| கொழும்பு | 0-௧௨-0 |
| சென்னை | 0-௩-0 |
| ஷெ புரட்டாசி-மீ நடப்பு வட்டி | 0-௰-௬ |
| ரங்கூன் ஷெ நடப்பு வட்டி | 0-௬-0 |
| ஈப்போ வட்டம் | உ-0-0 |
| ரங்கூன் உண்டியல் வட்டம் | ௬-0-0 |
| பவுன் | கறு-௩-0 |
| வெள்ளி ரூபாயிடை | 0-அ-௬ |

### தந்தி.

சிங்கப்பூர் புரட்டாசி-மீ ககூ-உ.

| | |
|---|---|
| உண்டியல் | நூற்றைம்பத்தாறு |
| ஈயம் | அறுபத்திமூன்றரை |
| ரப்பர் | பதினென்றே காலே அரைக்கால் |



காரைக்குடியில், காந்தியடிகளின் கூடு-வது பிறந்தநாள் கொண்டாட்டம் உ-௰-௩௧ தேதி மாலை ௫-மணிக்கு ஆரம்பமாயிற்று.

### ஊர்வலம்.

அப்பொழுது காங்கிரஸ் தொண்டர் நிலயத்திலிருந்து மகாத்மாவின் பெரிய உருவப்படம் மோட்டாரில் அலங்கரிக்கப்பட்டு ஊர்வலமாகக்கொண்டுபோகப்பட்டது. ஊர்வலத்தில் காங்கிரஸ் தொண்டர்கள் சுப்பிரமணியன் செட்டியார் குருகுலம், கா. புதூர் பாரதிப் பள்ளிக்கூடம், செக்காலை ராமநாதன் கலாசாலை, கழனிவாசல் காந்தி பாடசாலை, தேவகோட்டை சுவர்ணமூர்த்தி பெண்பாடசாலை ஆகிய தேசியப் பாடசாலைகளில் மாணவ மாணவிகளும் அவற்றின் ஆசிரியர்களும் கலந்து கொண்டார்கள். இவர்கள் யாவரும் அணிவகுத்து தேசியக் கொடிகளுடனும் கீதங்களுடன், கழனிவாசல் ரோடு, முத்துப்பட்டினத்தின் முக்கிய வீதிகள், செக்காலை ரோடு, கீழச் சத்திர வீதி, கல்லுக்கட்டி கீழ்வீதி, அம்மன் சந்நிதி வீதி ஆகிய தெருக்கள் வழியாகக் காந்தி சதுக்கமென்னும் மகர்நோன்புப் பொட்டலுக்குச் சென்று சேர்ந்தது. ஊர்வலத்தில் ஏராளமான ஜனங்கள் கலந்து கொண்டார்கள்.

### பொதுக்கூட்டம்.

காந்தி சதுக்கத்தில் தேவகோட்டை தாலூகாக் காங்கிரஸ் காரியதரிசி திரு மெ. சி. மாணிக்கவாசகம் அவர்கள் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. சுமார் ஆயிரம் ஆடவர்களும் பல பெண் மணிகளும் வந்திருந்தார்கள். தேவகோட்டை சுவர்ண மூர்த்தி பெண்பாடசாலை தலைமை ஆசிரியரும் இராட்டினப் புலவருமான திரு முருகன், சரஸ்வதி டிஸ்பென்சரி கம்பௌண்டர் திரு. சி. எஸ். மணி, ஜில்லாக் காங்கிரஸ் உதவிக் காரியதரிசி திரு கும்பலிங்கம் ஆகியோர் காந்தியடிகளின் சரித்திரம், விழாக் காலத்தில் செய்யவேண்டிய வேலை கதரை ஆதரித்தல், மதுபானத்தை ஒழித்தல் ஆகிய விஷயமாகப் பேசினார்கள். தலைவர் முடிவுரையின் பின்னர், காந்தியடிகள் உருவப்பட ஊர்வலம் தொண்டர் நிலயத்திற்குத் திரும்பிவந்து சேர்ந்தது. ஊர்வலத்திலும் பொதுக் கூட்டத்திலும் கதர் விற்கப்பட்டது குறிப்பிடத்தக்கது.

### பாரதியார் பாடல் போட்டி.

காந்தி வாரத்தின் இரண்டாவது நாளாகிய ௩-௰-௩௧ தேதி மாலை மணி ௪-௩௦-க்கு கா. புதூர் பாரதிப் பள்ளிக்கூடத்தில் தேசியப்பாடசாலை மாணவர்களின் பாரதியார் பாடல் போட்டி நடைபெற்றது. இப்போட்டியை நடத்த திருவாளர்களான மெ. சி. மாணிக்கவாசகம், தி. ஜ. ரங்கநாதன், த. இராமகிருஷ்ணன் ஆகியோர் நீதிபதிகளாக நியமிக்கப்பட்டிருந்தார்கள். போட்டியில், கா.முத்துப்பட்டினம் சுப்பிரமணியன் செட்டியார் குருகுலம், கா. புதூர் பாரதிப் பள்ளிக்கூடம், செக்காலை இராமநாதன் கலாசாலை, கழனிவாசல் காந்திப் பள்ளிக்கூடம் ஆகிய பாடசாலை மாணவர்கள் கலந்து கொண்டார்கள். கீழ்க்கண்ட மாணவர்களுக்குப் பரிசுகள் அளிக்கப்பட்டன. குருகுலம் திரு. முத்துசாமிக்கு "செந்தமிழ் நாடெனும் போதினிலே" "சொந்த நாட்டில் பிறர்க்கடிமை" என்ற இரு பாட்டுக்காகவும், கழனிவாசல் காந்திப் பள்ளிக்கூட மாணவர் திரு கண்ணையாவுக்கு "வீர சுதந்தரம்" என்ற பாட்டிற்கும், பாரதிப் பள்ளிக்கூடம் திரு கருப்பையாவுக்கு "வந்தே மாதரம்" என்ற பாட்டுக்கும் பரிசுகள் கிடைத்திருப்பதாக அறிவிக்கப்பட்டது.

### இரண்டாம் நாள் கூட்டம்.

பின்னர், பாரதிப் பள்ளிக்கூடத்திலிருந்து மாணவர் தேசிய பஜனை பாடிக்கொண்டு ஊர்வலமாக முனிசிபல் காரியாலயத்திற்கு வடக்குப் பக்கத்திலிருக்கும் பொட்டலுக்கு வந்து சேர்ந்தார்கள். அங்கே ஓர் பொதுக்கூட்டம் வேத மாணிக்கன் திரு. த. இராமகிருஷ்ணன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. பாரதிப் பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியர் திரு பூதலிங்கம், திரு கே. சுப்பிரமணியன் ஆகியோர் காந்தி ஜயந்தியின் அவசியம், 'நாம் செய்ய வேண்டும் வேலை' ஆகிய விஷயமாகப் பேசினார்கள்.

### கா. முத்துப்பட்டினம்.

மூன்றாம் நாளாகிய ௪—௰—௩௧-ம்தேதி ஞாயிற்றுக்கிழமை மாலை ௪-மணிக்கு ஊர்வலமும் பஜனையும் சுப்பிரமணியன் செட்டியார் குருகுலத்திலிருந்து ஆரம்பமாகி முத்துப்பட்டினத்தின் முக்கிய வீதிகளைச் சுற்றி முத்தாருணியின் கீழ்கரையில் வந்து சேர்ந்தது. அங்கு காந்தியடிகள், கதர், மதுபானத்தின் தீமை ஆகிய விஷயமாக திரு கு. கும்பலிங்கம் திரு சங்கர நாராயணன் ஆகியோர் பேசினார்கள். கூட்டத்திலும் ஊர்வலத்திலும் கதர் விற்பனை செய்யப்பட்டது.

### தேற்குத் தெரு.

காந்தி வாரத்தின் நான்காவது தினமாகிய நேற்று மாலை ௫-மணிக்கு தேசிய பஜனையும் ஊர்வலமும், சேவகப்பர் தெரு, கிழச்சத்திர வீதி, கல்லுக்கட்டி ஆகிய வீதிகளைச் சுற்றி தெற்குத் தெரு வந்து சேர்ந்தது. அங்கு கொப்புடைய நாயகி வித்தியாசாலை முன்னர் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

# காந்தி விழாக் கொண்டாட்டம்.

## மகாத்மா காந்தியடிகளின்

கூடு-வது பிறந்ததினத்தை முன்னிட்டு,

## 6—10—31 முதல்

## காரைக்குடி நிகழ்ச்சி முறை.

**செவ்வாய்க்கிழமை 6—10—31.**

ஊர்வலமும் பஜனையும்:—ஜயங்கொண்டபுரம்.
பொதுக் கூட்டம்:— ஷை

**புதன்கிழமை 7—10—31.**

ஊர்வலமும் பஜனையும்:— கழனிவாசல்.
பொதுக் கூட்டம்:— ஷை

**வியாழக்கிழமை 8—10—31.**

காலை 7-மணி முதல் பஜனையும், கதர் விற்பனையும்.

மாலை 5-மணிக்கு மகாத்மா உருவப்பட ஊர்வலம் தொண்டர் நிலயத்திலிருந்து ஆரம்பமாகி, மேல ஊருணி வீதி, சு. ராம. வீதி, கிழ ஊருணி வீதி, மெ. செ. வீதி, கல்லுக்கட்டி, ஆகிய வீதிகளைச் சுற்றி காந்தி சதுக்கம் செல்லும்.

பொதுக்கூட்டம்:—இரவு 7-மணிக்கு காந்தி சதுக்கம்.
தலைவர்:—மதுரை டாக்டர் பிச்சமுத்து அம்மாள்.
விரிவுரையாளர்கள்:—ஸ்ரீமதி பத்மாசனி அம்மாள்,
மதுரை திரு. ஸ்ரீனிவாச வரதன்.
மாணவர்களுக்கு பரிசு அளித்தல்:—தலைவர்.

**வெள்ளிக்கிழமை 9—10—31.**

ஊர்வலமும் பஜனையும்:—வடக்கு வல்லம்பர் தெரு.
பெண்கள் தனிக்கூட்டம்:—மாலை 5-மணிக்கு பாரதி பள்ளிக்கூடம் கா. புதூர்.
தலைவர்:—டாக்டர் பிச்சமுத்து அம்மாள்.
விரிவுரையாளர்:—ஸ்ரீமதி பத்மாசனி அம்மாள்.
ஊர்வலத்திலும் பொதுக்கூட்டத்திலும் எல்லாவிதமான கதர் துணிகளும் விற்கப்படும்.

## உங்கள் கடமை.

மகாத்மா காந்தியடிகளின் வாரக் கொண்டாட்டத்தில் நீங்கள் செய்ய வேண்டுவதென்ன?

க. அந்நியத் துணியை அகற்றி கதரை ஆதரியுங்கள்.
உ. கள், சாராயம் ஆகிய மதுபானத்தை ஒழிக்க முயலுங்கள்.
௩. காங்கிரஸ் அங்கத்தினரைச் சேருங்கள்.
௪. அந்நிய ஜவுளி, மதுபானம் ஆகியவற்றை ஒழிக்கத் தீவிரமாக மறியல் செய்யும் பொருட்டுத் தொண்டராய்ச் சேருங்கள், பொருள் உதவி செய்யுங்கள்.

இவையே மகாத்மா விரும்புவதாதலின், இவற்றைச் செய்யத் தவறாதீர்கள்.

பொ. திருகூடசுந்தரம்,
ஜில்லாக் காங்கிரஸ் காரியதரிசி.

### சு அ. நிலயம்.

உ—௰—௩௧-ம் தேதி இவ்வூர் சுதேசி அபிவிருத்தி நிலயத்தாரும் தாகூர் வாசகசாலையாரும் மகாத்மாவின் பிறந்த நாள் வைபவத்தை முன்னிட்டு, அடிகளின் உருவப் படத்தை காரில் வைத்து அலங்கரித்து, மேளதாளங்களுடனும், தேசிய பஜனையுடனும் சுதேசியபிவிருத்தி நிலயத்திலிருந்து ஊர்வலமாகக் கல்லுக்கட்டி, மெ. செ. வீதி ஆகிய வீதிகளைச் சுற்றி வந்தார்கள். கொப்புடை நாயகி வித்தியாசாலை மாணவ மாணவிகள் இவ்வூர்வலத்தில் கலந்து கொண்டார்கள். இரவு ௰-மணிக்கு இவ்வூர்வலம் திரும்பவும் நிலயம் வந்து சேர்ந்தது.

## குன்றக்குடி.

### காந்தியடிகள் கருணை நிலயம்.

காந்தியடிகள் பிறந்தநாள் கொண்டாட்டமும், குன்றக்குடி காந்தியடிகள் கருணை நிலயத் திறப்புவிழாவும் உ-௰-௩௧-ம் தேதி காலை மணி ௯-௩௦-க்கு மிகச் சிறப்பாக குன்றக்குடி காசிச் சாமியார் மடத்தின் முன்னர் அமைக்கப்பட்டிருந்தகொட்டகையில் நடைபெற்றது.

முதலாவதாக, காந்தியடிகள் உருவப் படம் ஊர்வலம் குன்றக்குடியின் இரத வீதிகள் வழியாகக்கொண்டு போகப்பட்டது. பின்னர், தேவாரபாராயணத்தோடும்தேசிய கீதத்தோடும் விழா ஆரம்பமானதும் பலவான்குடி சிவநேசன் ஆசிரியர் திருவாளர் ராம. ரு. ராம. ராமசாமி செட்டியாரவர்கள் "காந்தியடிகள் கருணை நிலயத்தைத் திறந்து வைத்து மகாத்மாவைப் புகழ்ந்து ஓர் விரிவுரை நிகழ்த்தினார். பின்னர் திரு பொன்னம்பல சிவம் அவர்கள் "காந்தியும் கருணையும்" எனும் பொருள் பற்றியும் சுப்பிரமணியன் செட்டியார் குருகுல அமைச்சர் திரு கும்பலிங்கம் அவர்கள் 'காந்தியம்', என்பது பற்றியும் ஊழியன் உதவி ஆசிரியர் திரு சி. ம. நடராஜன் அவர்கள் "நமது கடமை" என்பது பற்றியும் விரிவுரை நிகழ்த்தினார்கள். தலைவர் காந்தியடிகளின் கொள்கைகளைத் தழுவி தமது முடிவுரையைக் கூறினார். கடைசியில் ஸ்வாமி சிவானந்த சரஸ்வதி அவர்களால் எல்லோருக்கும் நன்றி கூறப்பட்டது.

கூட்ட முடிவில் காங்கிரஸ் அங்கத்தினர்கள் சேர்க்கப்பட்டதோடு, கதர் விற்பனையும் செய்யப்பட்டது.

## கொட்டாம்பட்டி.

காங்கிரஸ் கமிட்டியாரின் பெரு முயற்சியின் பயனாக உ—௰—௩௧-உ யன்று வெகு விமரிசையாகக் கொண்டாடப் பெற்றது. பல ஊர்களிலிருந்தும் கிராமவாசிகள் பெருந் திரளாகக் கூடிவிட்டனர். பள்ளிக்கூடத்திற்கு சிறுவர்கள் போகாதபடியால் அன்று விடுமுறையாகக்கொள்ளப்பெற்றது. சுமார் உ௦௦ ஜனங்களுக்கு காங்கிரஸ் கமிட்டியார் அன்னம் அளித்தனர், சரியாக ௫ மணிக்கு காங்கிரஸ் ஆபீசிலிருந்து, தலைவர் கே. எல். சிங்காரவேல் பிள்ளை அவர்கள் தலைமையில் ஒரு பெருத்த ஊர்வலம் மகாத்மா படத்துடன் கிளம்பிற்று. தொண்டர்கள் கொடி பிடித்து அணி வகுத்துச் சென்றனர். பல பிரமுகர்கள் ஊர்வலத்தில் கலந்து கொண்டார்கள். வந்தேமாதரம்! மகாத்மா காந்திக்கு ஜே! என்ற கோஷம் வானைப் பிளந்தது. ஊர்வலத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஏராளமாகக் கலந்து கொண்டது பாராட்டத்தக்கது. மகாத்மாவின் படத்தை ஆதி திராவிடச் சிறுவன் எடுத்து வந்தது மிகுந்த உணர்ச்சியைக் கொடுத்தது. திருவாளர்கள் ஆ. கருப்பையா பிள்ளை அவர்கள், ஆ. ராமசாமி பிள்ளை அவர்கள், கெ. எல். சிங்காரவேலு பிள்ளையவர்கள், கெ. குழந்தைவேலன் அவர்கள், கெ. மருதனயகம்பிள்ளை அவர்கள், ராஜா செட்டியார் முதலிய உள்ளூர் பிரபலஸ்தர்களும் சிருகுடி திருவாளர்கள் கனகசபை, கதிரேசன், முதலிய கனவான்களும் ஊர்வலத்தில் காணப்பட்டார்கள். இத்தகைய சிறந்த ஊர்வலம் இவ்வூரில் இதுவரை நடந்ததில்லை. செல்லும் வழி நெடுக சீனி சக்கரை முதலியன ஜனங்களுக்குக் கொடுத்து மிகுந்த ஆரவாரத்துடன் வரவேற்கப்பெற்றது. காந்தி திருநாளை முன்னிட்டு எல்லாத் தொழிலாளரும் வேலை நிறுத்தம் செய்து ஊர் முழுதும் கொடிகளாலும் தோரணங்களாலும் அலங்கரித்திருந்தனர். மாலையில் காந்தி சதுக்கத்தில் திரு. சிவப்பிரசாத் அவர்கள் தலைமையில் ஓர் பொதுக் கூட்டம் நடைபெற்றது. ஆயிரக் கணக்கான மக்கள் கூடியிருந்தனர். திரு. மருதனயகம் பிள்ளை அவர்கள் பிரசங்கித்தார்கள். பிறகு "கதரும் மதுவிலக்கும்" என்ற பொருள்பற்றி ஆ. ராமசாமிப் பிள்ளை அவர்கள் ஒன்றரை மணி நேரம் பிரசங்கம் புரிந்தார்கள். அ-மணிக்குக் கூட்டம் நிறைவேறியது என்று எம். சுப்பிரமணியம் எழுதுகிறார்.

### பிரசோத்பத்தி நடப்பு வட்டி.

| மாசம் | தேதி | சென்னை | இரங்கூன் |
|---|---|---|---|
| சித்திரை | ௩௦ | 0-௰௨-௬ | 0-௧௧-0 |
| வைகாசி | ௩௨ | 0-௧௪-௬ | 0-௰௪-0 |
| ஆனி | ௩௧ | 0-௰௰-0 | 0-௬-௬ |
| ஆடி | ௩௨ | 0-௰-0 | 0-௨-௬ |
| ஆவணி | ௩௧ | 0-௰0-0 | 0-௬-0 |
| புரட்டாசி | ௩௦ | 0-௰0-௬ | |

## பர்மா வட்டமேஜை மகாநாடு.

### பிரதிநிதிகள் பெயர்கள்.

சென்றவார இந்திய சர்க்கார் அறிக்கை ஒன்று கூறுவதாவது:—"பர்மா கவர்னர் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரின் சார்பாக அடியிற்கண்டவர்களுக்குப் பர்மா சர்வகட்சி மகாநாட்டிற்கு வருமாறு அழைப்பு அனுப்பியிருக்கிறார். தற்பொழுது நடந்துவரும் கடிதப்போக்கு வரத்தால் இன்னும் இரண்டொருவரது பெயர்கள் இந்த ஜாப்தாவில் சேர்க்கப்படலாம். இம்மகாநாட்டின் தலைவர், பிரிட்டிஷ் ராஜீயக் கட்சிகளிலிருந்து வரும் பிரதிநிதிகள், இந்திய அரசாங்கத்தின் சார்பாக வரும் உத்தியோகஸ்தர்கள் ஆகியவர்களது பெயர்கள் பிறகு வெளியிடப்படும். (௧) யு. பாபி, (௨) எம். எம். ஆன்கையின், (௩) யு. மாங்கை, (௪) யு. தின்மாங், (எம். எல். ஸி.) (௫) ஸர் ஓ. டி. கிளான்வில்லி (௬) எம். ஏ. ஆட்கத்தின் (௭) தாராவாடி யு. பு. (௮) யு. நி. (௯) யு. சு. (௧0) யு. சித்ஹலாயின், (௧௧) காம் பாக்கா (௧௨) ஜனுப்ஹாஜி (௧௩) என். எம். கௌவாஸ்ஜீ, (௧௪) சுராஷ்வீபா (௧௫) சிட்னிஹனி (பாரிஸ்டர்) (௧௬) ஹிவிபா ஸாப்வா (௧௭) சாங்கீ சாப்வா (௧௮) கனம் ஹார்ப்பர் (௧௯) மிஸ்டர் ஆர். வி. மௌவிலன் (௨0) யு. டன் ஆங்கியா."

### கட்சிகளின் விகிதம்.

மேற்குறித்த இருபது பிரதிநிதிகளுள் திரு. எஸ். என். ஹாஜியும் திரு. என். எம். கவஸ்ஜியும் பர்மாப் பிரிவினைக்கு விரோதமாயிருப்பவர். (௭) தாராவாடி யு. பு. (௨) யு. சு. (௩) யு. சிஹலாயின் (௪) யு. டன். ஆங்கியா ஆகிய நால்வரும் பிரிவினைக்கு விரோதமானவர்கள்தான். (௧) யு. பா. பே. (௨) ஆன்கைன் (௩) மாங்கை (௪) தீன்மாங் ஆகிய ஜனகக்ட்சியைச் சேர்ந்த நால்வரும், தான் விரும்பும் அரசியல் சீர்திருத்தம் பர்மாவுக்குக் கிடைக்குமானால், பர்மாப் பிரிவினை வேண்டும் என்ற கோரிக்கையை யுடையவர்கள் மற்றப் பத்துப்பேரும், எவ்வாறாயினும் பிரிவினை வேண்டுமென்றே கோரக்கூடியவர்.

### பெண்கள் வேண்டுகோள்.

அகில பர்மாப்பெண் மகாநாட்டுத் தலைவி ஸ்ரீமதி ஹிலாகக அவர்கள் பிரதம மந்திரிக்கும ராஜப் பிரதிநிதிக்கும் ஓர் தந்தி கொடுத்திருக்கிறார். அதில் தாங்கள் இரண்டு பர்மிய ஸ்திரீகளுக்காவது பர்மாச் சர்வகட்சி மகாநாட்டில் பிரதிநிதித்துவம் வேண்டுமெனக் கேட்டிருந்ததாகவும் அது அங்கீகரிக்கப்படவில்லை யென்றும் அரசியலில் ஸ்திரீகளும் கலந்துகொள்ள வேண்டியது அவசியமென்றும் பிரதம மந்திரியும் ராஜப் பிரதிநிதியும் தலையிட்டு அகில பர்மா ஸ்திரீகள் மகாநாட்டுக்கு மதிப்புக் கொடுக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டுளார்.

---

## அறிவிப்பு.

இராமனுதபுர ஜில்லா சிவகெங்கை ஜமீன் சருகணி போஸ்டு வில்வாம்பட்டியிலிருந்து தற்காலம் ரெங்கோனைச் சேர்ந்த பைபினில் வந்திருக்கிறேன்.

நான் ஷை வில்வாம்பட்டி உ. ராம. ராமசாமி பிள்ளைக்கு எனக்காக சகலமான காரியங்களும் நடத்துவதற்கு அட்ரோணி என்ற ஜெனரல் பவர் 17-11-1919-ல் மூப்பின் சப்ரிஜிஸ்டராபீசில் 45-நம்பர் பவராக ரிஜிஸ்தர்செய்த அனுப்பியிருக்கிறேன்.

ஷை பவரை திருப்பித்தரும்படி இரண்டு வருஷத்துக்கு முன்பே கேட்டும் தருவதாகவே சொல்லி நான் கடத்திவர்த படியால என் பவரைப் பொருத்து யாதொரு விதமான நடவடிக்கைகளும் செய்யக்கூடாதென்று சொல் சொல்லியுமிருக்கிறேன்.

இப்போது ஷை பவரை 11-9-1931-ல் ரிஜிஸ்தர் ஆபீசில் கேன்சல் செய்து ஷை ராமசாமி பிள்ளை [illegible] செப்டம்பர் [illegible] [illegible]

ஆகையால் ஷை இராமசாமி பிள்ளை [illegible] விதமான கடன் வாங்கினாலும் சொத்துக்களை விக்கவோ செய்தாலும் என்னை யாதொரு விதத்திலும் [illegible] [illegible] படுத்துகிறேன்.

வி. மு. உடையார் பிள்ளை,

2/12 மூப்பின்.

---

# ல ண் ட ன் ம கா நா டு .

## சமஷ்டியின் பொருளாதாரம்.

### வகுப்புப் பிரச்சினையில் அபிவிருத்தியில்லை.

### ஐக்கிய அரசியலமைப்புக் கமிட்டி.

சென்றவாரம் ஐக்கிய அரசியலமைப்புக் கமிட்டி, இரு சமஷ்டிச் சட்டசபைகளுக்கும் இருக்கவேண்டிய சம்பந்தம், பொருளாதாரம் முதலிய விஷயங்களைப்பற்றி விவாதித்தது. பொதுவாகப் பெரும்பாலோர் அஸம்பிளி, செனேட் எனும் இரு சட்டசபைகள் இருக்கவேண்டும் என்பதையும், பிரிட்டிஷ் இந்தியா சம்பந்தப் பட்டவரையில் நேரே வாக்காளர் தொகுதிகளால் அஸம்பிளிக்கும் ஸெனேட்டுக்கு இடைப்பட்ட சபைகளாலும் தேர்தல் நடத்தவேண்டுமென்பதையும் பலரும் ஆதரித்தனர்.

### சமஷ்டியின் பொருளாதாரம்.

அக்டோபர் மூன்றாந்தேதி பிரிட்டிஷ் இந்தியப் பிரதிநிதிகள் சார்பாக, திரு. ஏ. ரங்கசாமி அய்யங்கார் சமஷ்டி அரசாங்கப் பொருளாதாரததைப் பற்றிய சில திட்டங்களைத் தெரிவித்தார். அவர் திட்டங்களின் சாரமாவது:—(க) சமஷ்டி அரசு அமைவதற்கு முன்னுள்ள பொதுக் கடன்களைச் சமஷ்டி அரசாங்க முழுவதினுடையவும் கடன்களாகக் கருதவேண்டும்; (அதாவது சுதேச சமஸ்தானங்களுக்கும் சம்பந்தமுண்டு என்பதாகும்.) (உ) ஒரே பொதுவான வரவு செலவுத் திட்டம் தயாரிக்கப்படவேண்டும்; (ங) உள்ளே ஒருவருக்கொருவர் சுங்கவரிகள் விதிப்பதை விலக்கிவிடவேண்டும்; (ச) தபால், தந்தி, ரயில்வே முதலியவை சமஷ்டிக்குச் சொந்தமானவை; அவை தம்மில் தாமே சரிக்கட்டிக் கொள்ளக் கூடியனவாகச் செய்யப்படவேண்டும்; (ரு) வரிகளுக்கு ஈடு செய்வதற்காக ரெயில்வே லாபததை உபயோகித்தலாகாது; வரிகள் சமஷ்டியின் எல்லாப் பகுதியினராலும் ஏற்றுக்கொள்ளப் படவேண்டும்; (சு) சமஷ்டியின் வருமானம் சமஷ்டி அரசாங்கத்தாரே நேராக விதித்து வசூலித்துக் கொள்ளும்படியாக இராமல் அவ்வப் பகுதியார் வசூலித்துத்தரக்கூடிய வாறிருக்கும்; ஆனால், பொருளாதாரக் கொள்கையில் மாறுதல் ஏற்பட்டால், நேரே விதித்து வசூலிக்கக் கூடிய வரிகள் அவசியமாகலாம்.

### சமஷ்டியின் வருமானங்கள்.

கடற் சுங்க வரிகள், அது சம்பந்தமான கலால் வரிகள், கம்பெனிகளின் அதிக வரி (ஸூபர் டாக்ஸ்), வியாபார ஸ்டாம்புகள் ஆதியவற்றைச் சமஷ்டி அரசாங்க வருமானமாகவும், நிலவரி, ஜன சமூக உபயோகத்திற்கான பொருள்கள் மீது விதிக்கப்படும் கலால் வரி, வியாபாரத்திற்கல்லாத ஸ்டாம்புகள் ஆதியவற்றை மாகாண வருமானமாகவும் அவர் குறித்திருக்கிறார். மாகாணங்கள் திறை செலுத்துவது கூடாதென்பது அவர் அபிப்பிராயம்.

### சமஸ்தானப் பிரதிநிதிகள் கருத்து.

இத்திட்டங்களின் மேல், சுதேச சமஸ்தானப் பிரதிநிதிகள் தாங்கள் அதனை ஆராய்வதற்குச் சிறிது காலம் வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்கள். அதன்படியே தலைவர் கமிட்டியை இன்று தினத்திற்கு (செவ்வாய்க்கிழமைக்கு) ஒத்திப் போட்டார். அக்டோபர் ௩-ந் தேதி யிட்ட "இந்து" நிருபரின் லண்டன் தந்தியின்படி சமஸ்தானப் பிரதிநிதிகள் திரு. அரங்கஸாமி அய்யங்கார் திட்டங்களில் பெரும்பாலும் உடன்பாடு கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

### இனி நடக்க விருக்கும் விவாதம்.

இன்று துவங்கும் சமஷ்டிக் கமிட்டி சீக்கிரம் ஒத்திபோடப்படும் என்று தெரிகிறது.

எனினும் இவ்வாரத்திற்கும் அடுத்த வாரத்திற்குமாக ஸாங்கிப் பிரபு ஓர் வேலைத்திட்டம் தயாரித்திருக்கிறார். அதாவது பின்வரும் விஷயங்களைக் குறித்து விவாதம் இனி நடக்கவேண்டும்:—(க) மந்திரி சபைக்கும் சட்டசபைக்குமுள்ள சம்பந்தங்கள்; (உ) மத்திய, மாகாணச் சட்டசபைகளின் அதிகாரங்கள்; (ங) சமஷ்டி அரசாங்கத்துக்கும், மாகாண, சமஸ்தானங்கட்கும் உள்ள நிர்வாக ரீதியான சம்பந்தங்கள்; (ச) சமஷ்டி நீதி மன்றம்.

### சிறுபாலார் கமிட்டி.

சிறுபாலார் உப கமிட்டி, செப்டம்பர் மாதம் ௨௯-ம் தேதி திரு. மாக்டனால்டின் தலைமையில் ஆரம்பமாயிற்று. அவர் ஹிந்து-முஸ்லீம் பிரச்சினையை மாத்திரமல்ல, சகல சிறுபான்மை வகுப்புப் பிரச்சினைகளையும் தீர்ப்பது அவசியமென்றும், பிரதிநிதிகள் தங்களுக்குள்ளேயே இதனைத் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்றும் கூறினார். கடைசியில் சிறுபான்மை வகுப்புப் பிரதிநிதிகள் தங்களுக்குள்கூடிச் சமரசம் செய்து கொள்ள வேண்டுமென்பதற்காக வியாழக்கிழமைக்குக் கமிட்டி ஒத்திப்போட்டது.

### மறுபடியும் ஒத்திப்போடப்பட்டது.

வியாழக்கிழமையும் அரை மணி நேரம் கூடியிருந்து, மகாத்மா பிரரேபிக்க, ஆகாகான் அவர்கள் ஆதரிக்க, மறுபடியும் கூட்டம் ஒருவாரத்திற்கு ஒத்திப்போடப்பட்டது. உத்தியோக முறையிலல்லாமல், பல வகுப்பினரும் சேர்ந்ததோர் கமிட்டி கூடிச் சமரசத்திற்கு வரவேண்டு மென்பதற்காகவே இவ்வாறு செய்யப்பட்டது.

### தற்போழுதைய நிலைமை.

உத்தியோக முறையில்லாத சிறுபான்மைச் பிரச்சினைப் பரிசீலனைக் கமிட்டி மகாத்மா காந்தி தலைமையில் அக்டோபர் ௨, ௩-ம் தேதிகளில் கூடியது. குறிப்பிடத்தக்க அபிவிருத்தி எதுவும் ஏற்படவில்லை. பார்ஸி சமூகத்தைத் தவிர்த்த ஏனைய சமூகங்களுக்குத் தனியே பிரதிநிதித்துவம் வேண்டுமென்ற கொள்கை மட்டில் பெரும்பான்மையோரால் தீர்மானிக்கப் பெற்றது. மகாத்மா, சீக்கியரையும் முஸ்லீம்களையும் தவிரப் பிற வகுப்பினருக்குத் தனிப் பிரதிநிதித்துவம் ஏற்படுத்துவதில் காங்கிரஸின் ஆட்சேபத்தைத் தெரிவித்தார். முஸ்லீம்களுக்கும் சீக்கியருக்கும் தனிப் பிரதிநிதித்துவம் வழங்குவதுங்கூட ஓர் நிர்ப்பந்தத் தீமை என்பதே அவர் கருத்து.

---

## தங்கம் கப்பலேறுகிறது.

### ௨ வாரத்தில் ௧௩0 லட்சம்.

செப்டம்பர் ௩0-௨ யிட்ட பம்பாய்ச் செய்திகள் தந்துள விவரங்கள் வருமாறு:—

வரி மசோதாப் பிரரேபனைகள் இங்குச் சிலரால் சந்தோஷத்துடனும்சிலரால் வெறுப்புடனும் கருதப்படுகின்றன. செக்யூரிட்டிகள் விலை நிதானமாக இருக்கின்றன. மில் பங்குகளின் விலை அதிகரித்திருக்கின்றன. தடையில்லாததினால் ஏராளமான தங்கம் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதியாகிறது. ௨௩-ந் தேதி தபால் கப்பலில் ௨௫-லட்ச ரூபாய் பெறுமான தங்கம் சென்றது. அடுத்த தபால் கப்பலில் ௧௩௫-லட்ச ரூபாய் தங்கம் அனுப்ப இடம் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

சென்ற நாலு தினங்களில் ௨ லட்சம் தோலாத் தங்கம் (௫0 லட்ச ரூபாய் பெறுமானது) பம்பாயிலிருந்து ஏற்றுமதியாகிவிட்டதாகப் பலமாக வதந்தி உலாவுகிறது. இதற்குத் தற்பொழுது தங்கத்தின் விலை டாலரைவிட குறைவாக இருப்பதே காரணமாகும். இதனால் தங்கத்தை அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வது லாபகரமாக இருக்கிறதாம்.

இந்திய வியாபாரிகள் சங்கம் இந்தியா அரசாங்க வரவு செலவு இலாகாவுக்குப் பின்கண்ட தந்தியை அனுப்பியிருக்கிறது:—"அயல் நாடுகளில் தற்சமயம் தங்கத்திற்கு அதிக விலை கிடைப்பதால் இந்தியாவிலிருந்து தங்கம் ஏராளமாக ஏற்றுமதி செய்யப்படுகின்றது. இதனால் தங்க ஏற்றுமதியைத் தடுக்க வேண்டுமென்று அரசாங்கத்தாரை வற்புறுத்துகிறோம். இவ்வாறு செய்யாவிட்டால் தேசத்தின் தங்கமெல்லாம் அயல்நாடுகளுக்கு வடிந்துபோய்விடுமென அஞ்சுகின்றோம்."

---





## மிகப் பெரிய மனிதர்.

### காந்திஜிக்குச் சார்லிச் சாப்ளினுடைய வாழ்த்து.

லண்டனிலிருந்து வந்த ஆகாயத் தபாற் செய்திகளுள் ஒன்று வருமாறு:—

இதுகாலைப் பொதுமக்களின் கண்களில் அதிகமாகப்படும் இருவர் முதன் முறையாக இவ்வாரம் சந்தித்தனர்.

தானாக ஏற்றுக்கொண்ட வறுமைக்குப் புகழ்வாய்ந்த காந்தியடிகள், படக் காட்சியின் விகட சிகாமணியாய்ப் பொருள் ஈட்டியதில் அதே போன்று புகழ்வாய்ந்த திரு. சார்லி சாப்ளினைச் சந்தித்தார்.

லண்டனில் கிழக் கடைசியில் உள்ள கானிங் டவுனில் ஓர் இந்திய டாக்டரின் சிறிய வீட்டில் ஆர்வமாக இணைக்கப்பட்ட இவ்விருவரும் சந்தித்தனர்.

பதினாயிரம் ஜனங்களுக்கதிகமான உற்சாகம் மிகுந்த ஓர் மாபெருங் கூட்டம் அவ்வீட்டிற்கு வெளியிற் கூடிவிட்டது. கூட்டத்தை ஒழுங்குப்படுத்த அதிகமான போலீஸ் உதவி தேவையாகி விட்டது சார்லியைப் குறித்துத் தாம் கேள்விப்பட்டதேயில்லை யெனக் காந்திஜி கபடமின்றி ஒப்புக்கொண்டதனால் முதன் முதல் உண்டாய தொந்தரவிற்குப் பிறகு இருவரும் சோபாவில் ஒருவர் பக்கம் ஒருவர் இருந்துகொண்டு நீண்ட நேரம் தனியாகச் சம்பாஷித்துக் கொண்டிருந்தனர் பிறகு சார்லி நிருபர்களிடத்தில் கூறியதாவது:—

"காந்தியடிகள் மிக மிகப் பெரிய மனிதர். நாங்கள் இயந்திரத்தைக் குறித்துப் பேசினோம். இயந்திரத்திற்கு அவர் ஏன் விரோதமாக இருக்கிறார் என்பது எனக்குத் தெரியவில்லை என்று சொன்னேன். அவர் அதை விளக்கினார்."

மற்றொரு நிருபரிடத்தில் சார்லி சாப்ளின் கூறியதாவது:—

"நான் ஓர் அரசியல் வாதியல்ல. சர்வதேசப் பெரியாரைக் காண யான் ஆவாவுகின்றேன். காந்தியடிகள் பிறர் பின்பற்றத் தகுந்த ஓர் மனிதராவார். அவரை ஓர் மிக மிகப் பெரிய மனிதராக நான் காண்கின்றேன். நாங்கள் இயந்திரத்தைப்பற்றிப் பேசினோம். மனிதனை நாம் அவனது வேலைச் சுமையினின்றும் நீக்க வேண்டுமென்று நான் காந்தியடிகளிடம் கூறினேன். நூதன இயந்திரங்கள் கண்டு பிடிக்கப்பட்டது மனிதனைத் துயரின்றும் அதிகமாக விடுவித்துவிட்டது என்றேன். காந்தியடிகள் வாளா சிரித்தார்."

காந்திஜியின் பக்கத்தில் சார்லி முழந்தாளிட்டபோது அவரது மனம் மேலைநாட்டின் துயரோடு களிப்புங்கலந்த நாடகத்தில் எவ்வளவு பதிந்திருந்ததோ அவ்வளவு அவருடைய உயிர் துன்பக் கடலாடும் இந்தியாவின் கோடிக்கணக்கான மக்களோடு உண்மையாகவும் அன்பாகவும் கலந்து விட்டதுபோல் தோன்றியது.

---



# காந்திக்கு லண்டன் உபசாரம்.

## வேறெவருக்கும் செலுத்தாத மரியாதை.

### மகாத்மா தரிசனத்துக்குக் கட்டுக்கடங்காக் கூட்டம்.

மகாத்மா காந்தி லண்டன் போய்ச் சேர்ந்ததும் அவர் அங்கு வைபவமாக வரவேற்கப்பட்டதும் பற்றிய சுருக்கமான செய்திகளை ஏற்கெனவே வெளியிட்டுள்ளோம். இப்பொழுது, "சுதேசமித்திர"னின் சொந்த நிருபர், மகாத்மாவுக்கு இங்கிலாந்து ஜனங்கள் செய்த உபசாரத்தை லண்டனிலிருந்து விரிவாக எழுதியனுப்பியிருக்கிறார். அந்த விவரம் வருமாறு:—

### இதுவரையிலில்லாத உபசாரம்.

அன்னிய நாடுகளிலிருந்து பல ராஜதந்திரிகள்வந்திருந்தார்கள்; அவர்களைப் பிரிட்டிஷ் ராஜீய வாதிகள் மதிப்புடன் வரவேற்றதுண்டு. ஆனால் பிரிட்டிஷ் பொதுஜனங்கள் அன்னாருடைய விஷயத்தில் சிரத்தை பாராட்டியதில்லை. காந்திமகான் சம்பந்தப்பட்ட வரையில் நடப்பது வேறு. சமீபத்தில் ஜெர்மன் சான்ஸலர் வந்தார். பிரஞ்சு அன்னியநாட்டு மந்திரி வந்தார். கானடா ஆஸ்திரேலியா, தென்னாப்பிரிக்கா ஆகியவற்றின் முதன் மந்திரிகள் வந்திருந்தனர். இவர்களைப்பற்றிப் பொது ஜனங்கள் யாரும் கவனிக்கவில்லை. ஆனால் மகாத்மா இங்கு காலடிவைத்ததுமுதல் அவரைப்பற்றியே பொது ஜனங்கள் பேசிக் கொண்டிருக்கிறார்கள். "நண்பர் நிலைய" மண்டபத்தில் அவருக்கு முதன் முதலாக வரவேற்பு நடந்தது அம்மண்டபத்தின் வெளியிலும் உள்ளேயும் தென்பட்ட காட்சிகளைப் பார்த்தால் மகாத்மாவிடம் பிரிட்டிஷ் மகாஜனங்கள் கொண்டுள்ள மதிப்பு நன்கு வெளியாகிறது.

### மகாத்மா தரிசனத்துக்கு வெகு ஆவல்.

அன்று மாலை மழை கொட்டிக் கொண்டிருந்தது. மழையில் சொட்டச் சொட்ட நனைந்து கொண்டு நான் மண்டபத்திற்குப்போய்ச் சேர்ந்தேன். என்னைப்போலவே இன்னும் ஆயிரம் பேர் மழையைக் கவனியாமல் டிக்கட் அகப்பட்டால் போதுமென்று கருதி வந்தவர்கள். டிக்கட் அகப்படாமல் திரளான ஜனங்கள் பொறுமையுடன் வெளியே மகாத்மா தரிசனத்திற்காகக் காத்துக் கிடந்தனர். அவர்கள் பெரிய கீர்த்தியுடன் கூடிய அந்த வாமன ரூபத்தைக்காண வெகு ஆவலாயிருந்தனர். ஆனால் அவர் தரிசனம் கிடைக்கவில்லை. வாசற்பக்கமாக அவர் உள்ளே போகவில்லை. யாருக்கும் தெரியாமல் கொல்லைப்புற வழியாக அவரை உள்ளே அழைத்துச் சென்று விட்டனர். ஜனக்கூட்டத்தினால் மகாத்மா திணறிப் போகாத வண்ணம் அவ்வாறு செய்யப்பட்டது.

### போட்டோக்காரர் வெளியேற்றப் பட்டனர்.

மண்டபத்தின் உள்ளே மகாத்மா மேடைக்குப் போய்ச் சேர்ந்ததும் சபையோர் எழுந்து நின்றனர். உள்ளிருந்த கூட்டத்தில் ௧௦௦0-க்கு ௨௫-பேர் தான் இந்தியர்கள். அவர்கள் அவர்கள் மகாத்மா காந்திக்கு ஜேய், வந்தேமாதரம் என்று ஆரவாரம் செய்தனர். ஆங்கிலேயர்கள் உரக்க கரகோஷம் செய்தனர். மகாத்மா புன்னகையுடன் கைகூப்பிப் பதில் வந்தனங் கூறினார். பண்டித மாளவியா, ஸ்ரீமதி ஸரோஜனி, திரு. சாஸ்திரி, திரு. ரங்கஸாமி ஐயங்கார், முதலியோர மேடை மீது வீற்றிருந்தார்கள். மகாத்மாவின் கடைசிப் பிள்ளை தகப்பனார் பக்கத்தில் உட்கார்ந்திருந்தார். அக்கிராசனர் திரு. ஹாஸ்மன் பிரிட்டிஷார் சார்பாக மகாத்மாவை வரவேற்று, காந்திஜிக்கு மிகவும் பிரியமான மௌனத்தை ௨-நிமிஷம் கொண்டாடும்படி சபையோரை வேண்டிக் கொண்டார். அவ்வண்ணமே ௨-நிமிஷம் சபை நிசப்தமாயிருந்தது. மேலே நடக்கப்போவதை யறியப் பலரும் பரபரப்புடன் இருக்கக் காணப்பட்டனர். காந்தி மோஹங் கொண்ட அக்கூட்டத்தில், மகாத்மா சற்றும் ஆடம்பரமின்றி மனதைக் கவரும் வண்ணம் பேசினார். அவர் உட்கார்ந்து பேசியது புகைப்படக்காரர்களுக்குச் சங்கடமுண்டுபண்ணி விட்டது. புகைப்படமெடுக்க ௩0, ௪0-பேர் இயந்திரங்களுடன் நின்றுகொண்டு, உபத்திரவம் விளைவித்தார்கள். அவர்களுடைய உபத்திரவம் தாங்கமாட்டாமல் அக்கிராசனர் அவர்களை வெளியே போகச் சொல்லி விட்டார்.

### விசேஷப் போலீஸார் திண்டாடிப் போயினர்.

மகாத்மா பேசியபொழுது ௧௦௦-பத்திரிகைப் பிரதிநிதிகளுக்குமேல் அச்சமயம் வந்திருந்தனர். அவர்கள் மூலம் மகாத்மாவின் பிரசங்கம் உலகத்தின் நான்கு மூலைகளுக்கும் அன்று மாலையே பரவி விட்டது. கராச்சிக் காங்கிரஸ் தீர்மானத்தைக் கட்டளையாக ஏற்று, தற்காலிகமான சில நிர்ப்பந்தங்களுக்குட்பட்டு இந்தியாவின் விடுதலையை அவர் வற்புறுத்துவாரென்று பிரசங்கத்திலிருந்து தெரிந்தது. ௨௫-நிமிஷந்தான் அவர் பேசினார், ஆனால் அதற்குள்ளாகவே மண்டபத்திற்கு வெளியே கூட்டம் கட்டுக்கடங்காமல் போய்விட்டது. அவர்களைத் திருப்தி செய்விக்கும் பொருட்டு அக்கிராசனர் மகாத்மாவை வாசல் புறத்திற்கு அழைத்து வந்து காட்டினார். மகாத்மாவைக் காண ஆவல் கொண்டு ஜனக்கூட்டம் தள்ளிக் கொண்டு வந்தது. சிறிது நேரம் ஒரே குழப்பமாயிருந்தது. பந்தோபஸ்திற்கென்று வந்திருந்த விசேஷப் போலீஸார் திக்குமுக்காடிப் போயினர். காந்தி வருகையை எதிர்பார்த்து ஒரு பெரிய ஊர்வலம் தயாராகக் காத்திருந்தது. அவ்வூர்வலத்தின் முன்னணியில் காந்திஜியின் வண்டி நிறுத்தப்பட்டது. அவ்வண்டி தலை மறைகிற வரையில் ஜனக்கூட்டம் அங்கிருந்து விட்டுப் பிறகு கலையவாரம்பித்தது.

### மகாத்மா விஜயப் பேசும் படங்கள்.

காந்திஜிக்கு விரோதமாகச் சில ஆர்ப்பாட்டங்கள் நடக்கப்போவதாக வதந்தியாயிருந்தது. ஆனால் அந்த ஏற்பாடுகள் உருக்கொள்ளவில்லை. அரசாங்கத்தார் தகுந்த நடவடிக்கையெடுத்து அவைகளை அடக்கிப்போட்டார்கள். மேலும் எதிரான ஆரவாரங்களுக்குப் பொதுஜன அபிப்பிராயம் விரோதமாயிருந்ததால், எதிர்க்கட்சிகளின் விஷமம் பலிக்கவில்லை. ஒரு நூறு கழுதைகளுக்கு அரைத்துணி மட்டும் கட்டி, மகாத்மா என்று அவைகளுக்குப் பெயர் எழுதி, தெருக்களில் ஊர்வலம் விடுவதென்று சிலர் ஏற்பாடு செய்திருந்தனர். இந்த ஏற்பாட்டை அவர்கள் முடிவில் கைவிடும்படியாயிற்று. பிக்கடில்லி நாடகக் கொட்டகையில் ஒரு நடிகர் மகாத்மா காந்திபோல் நடித்து, ஆபாசப்பாட்டுப் பாடுவதாயிருந்தார். நாடகம் ஆரம்பிக்க ௪-மணி நேரத்திற்கு முன்பே அரசாங்கத்தார் அப்பாட்டைப் பாடக் கூடாதென்று உத்தரவு போட்டு விட்டனர். மகாத்மா விஜயத்தை யொட்டி லண்டன் சினிமாக்களில் இப்போது பேசும் படங்கள் எங்கும் காட்டப்படுகின்றன. பட்சபாதமற்ற நோக்கையிலேயே அவை இருக்கின்றன. ஆனால் 'டாட்லர் தியேட்டர்' என்ற கொட்டகையில் மட்டும் ஓர் ஆட்சேபகரமான படம் காட்டப்பட்டது. "காந்தி ஆடம்பரமற்றவர் என்று பறையடிக்கப்பட்ட போதிலும், ஆடம்பரமான வண்டியில் தான் ஏறுகிறார்" என்று தலைப்பெயரிட்ட படம் அது.

### வட்டமேஜையில் கண்டனம்.

ஸர்வகட்சி மகாநாட்டில் மகாத்மா உறுதியாகவும் கோடியாகவும் தமது கட்சியை வற்புறுத்தினார். வெறும் உபசாரமாகப் பேசிக்கொண்டிராமல் தமது கோரிக்கைகளை முதலெடுப்பிலேயே அவர் எடுத்துச் சொல்லிவிட்டார். பிரிட்டிஷ் இந்தியப் பிரதிநிதிகள் அற்ப விஷயங்களைக் குறித்துப் பேசுவதில் காலங்கடத்துவதை அவர் கண்டதும், மகாத்மா கண்டிக்கவாரம்பித்தார். "இப்படிப் பேசிக் கொண்டே போனால் அதற்கு முடிவேது?" என்று அவர் கேட்டார். அரசாங்கத்தார் கையை மூடிக் கொண்டிராமல், தங்களுடைய உத்தேசத்தைத் தெரிவித்து விடும்படி அவர் வற்புறுத்தினார். பழைய தொழில் அரசாங்கத்தை விடப் புதிய தேசிய அரசாங்கம் இந்தியச் சுய ஆட்சி விஷயத்தில் உற்சாகக் குறைவாயிருப்பதாக "மாஞ்செஸ்டர் கார்டியன்" பத்திரிகையும் குறை கூறுகிறது.

---

## கார் வரி உயர்வு.

### மந்திரியிடம் முறையிட ஏற்பாடு.

மோட்டார் வரி விகிதத்தால் இம்மாகாணத்தில் எத்தகைய நிலைமை ஏற்பட்டிருக்கிற தென்பதை திரு எப். ஈ ஜேம்ஸ் தலைமையில் ஓர் கமிட்டியார் விசாரித்து அது சம்பந்தமாகப் பல முக்கிய விவரங்களைச் சேகரித்திருக்கின்றனர். ஜில்லா போர்டுகளும், முனிசிபாலிடிகளும் மோட்டார் லாரிகளுக்கு மிகவும் அமிதமாக லைசென்ஸ் வரி விதித்திருப்பதால், சகலவிடங்களிலும் மோட்டார் லாரிகளை எடுத்துவிட்டு, மாட்டு வண்டிகளை உபயோகிக்க ஆரம்பித்திருக்கிறார்களென்றும் அதனால் மோட்டார் வரியிலும், லைசன்ஸ் வரியிலும் மண் விழுந்துவிட்டதென்றும் கமிட்டியார் அபிப்பிராயப்படுகின்றனர். இன்னும் பஸ்களின் தொகையும் வர வரக் குறைந்து வருகிறதாம். எனவே மோட்டார் வரி விகிதத்தைக் குறைக்க வேண்டியது அவசியமாகும்; ஸ்தல ஸ்தாபனங்கள் அமிதமான லைசன்ஸ் வரி விதித்திருப்பது நியாயமற்றதாக இருக்கிறது; ஸ்தல ஸ்தாபனங்கள் மோட்டார் பஸ்களுக்கும், லாரிகளுக்கும் ஓர் குறிப்பிட்ட தொகைக்கு மேல் லைசன்ஸ் வரி விதிக்கக்கூடாதென மேற்படி கமிட்டியார் ஓர் மசோதாத் தயாரித்திருக்கிறார்களென்று தெரிகிறது. அம்மசோதாவைசென்னைச் சட்ட சபையில் கொண்டு வருவதற்கு முன், கூடிய சீக்கிரம் அவ்விஷயமாக வேண்டிய அவசியத்தைப் பற்றி ஓர் கோஷ்டியார் ஸ்தல ஸ்தாபன மந்திரியைக் கண்டு பேசுவார்களெனத் தெரிகிறது.

---

# காங்கிரஸ் செய்திகள்.

## சிவகங்கை.

### திரு. பக்தவத்சலம் வருகை.

காரைக்குடியிலிருந்து தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி ஸ்ரீமான் பக்தவத்சலம் அவர்களும், ஆர். வி. சாமிநாதன், ரெ. சிதம்பரபாரதி, ஐ. டி. எப். சுந்தரராஜ அய்யங்கார் ௪ பேர்களும் சுமார் காலை ௧௧-மணிக்கு இந்நகர் காங்கிரஸ் காரியாலயம் வந்து சேர்ந்தார்கள். இங்கிருந்து தலைவர் ஜாகைக்கு மேளவாத்தியத்துடன் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டது. சுமார் ௫00 பேர்களுக்கு மேல் வெயிலையும் கவனியாது ஊர்வலத்தில் கலந்து கொண்டார்கள். இந்நகர் பிரபலஸ்தர்களாகிய ஸ்ரீமான்கள் வக்கீல் ஏ. கணபதி அய்யர், வக்கீல் வி. சுந்தரமய்யர், வக்கீல் என். எம். நாராயண அய்யங்கார், வக்கீல் ராஜாராம் நாயக் முதலியோர் தலைவர் பின்னுடன் நடந்தே அழைத்து வந்தார்கள். இந்த ஜில்லா பெரிய மேளகாரர் திரு. மாயாண்டியாபிள்ளையவர்கள் மேள ஜதையின் சங்கீத இனிமையால் வெயிலும் தோன்றாமல் இருந்தது. மாலை ௩-மணிக்கு இந்நகர் மகாத்மா காந்தி கதர் வஸ்திராலயத்தின் பங்குதார்களின் சார்பாக ரெ. சிதம்பர பாரதி வேண்டுகோட்கிணங்கி கொடியேற்று வித்து ஸ்ரீமான் பக்தவத்சலம் அவர்கள் அகில இந்திய காங்கிரஸ் தலைவர்கள் வேண்டுகோளின்படி காந்தி வாரத்தில் கதர் வாங்குபவர்களுக்கு சௌகரியம் யேற்படும்படி இந்நகரில் கதர் வஸ்திராலயம் யேற்படுத்திய இந்த பங்குதார்களை சந்தோஷிப்பிக்க வேண்டுமென்றும் இக்கடை பங்குதார்கள் அகில இந்திய சர்க்கா சங்கத்தாரின் கட்டளைப் பிரகாரம் நியாயமான விலையில் உண்மை கதர் துணியை ஜனங்களின் இஷ்டத்தின் பிரகாரம் வியாபாரம் செய்ய முன்வந்ததற்கு வந்தனம் செலுத்துகிறேன் என்றும் சுத்தக் கதர் துணியுடன் மாணவர்களுக்கும் ஜனங்களுக்கும் அன்றாடம் அவசியமான சுதேசி சாமான்களை இக்கடையில் வாங்கி விற்பனை செய்து சுதேசி விர்த்தி இக்கடைக்காரர்கள் செய்யும்படியும் கேட்டுக் கொண்டார்கள். தியாகத்தின் பேரிலும் இந்திய ஜனங்களின் சுதந்திரத் தாகத்தின் பேரிலும் வெற்றியுடன் சமாதானத்தில் பறந்து கொண்டிருக்கும் நம் இந்திய தேசிய சுயராஜ்யக் கொடி இக்கடையின் முன்னேற்றத்திற்கும் அன்னம் இன்றி ஆடை இன்றி கஷ்டப்படுவோரின் கவலையை இத்தாலூகாவில் போக்கி இத்தாலூகா வாசிகளை கதர் கட்டி தேசாபிமான சுடரளிய இக்கடையில் நம் கொடிபறக்க ஆண்டவன் அருள்புரிவார் யென்றும் கேட்டுக் கொண்டார்.

### கொடி வணக்கம்.

மாலை ௫-மணிக்கு இந்நகர் காங்கிரஸ் சபையாரால் நாட்டப்பட்ட கொடி மரத்தை சூழ தொண்டர்கள் நின்றார்கள் சுமார் ௨000ம் பேர்களுக்கு மேல் மழைபெய்து நின்ற ஈரத்தையும் கவனியாது அமைதியாய் அமர்ந்திருந்தார்கள். காரியதரிசியவர்கள் கொடி யேற்றுவைக்கும்படி ஸ்ரீமான் பக்தவத்சலம் அவர்களைக் கேட்டுக் கொள்ள ஸ்ரீமான் பக்தவத்சலம் அவர்கள் கொடியின் வர்ண அமைப்பின் காரணங்களைப்பற்றியும் ஜாதி வித்தியாசமன்னியில் காங்கிரசும் வரும் சுயராஜ்ய ஆட்சியும் நிர்வாகம் நடாத்துதல் நோக்கமே நம் கொடியின் வர்ண அமைப்பென்றும் ஜன சமூகத்தின் அவசியமான வீரம் தூய்மை அன்பு என்ற அடிப்படையே மூன்று வர்ணத்தில் அமைப்பைக் காட்டுகிறதென்றும் இக்கொடிக்காக நாகபுரியில் ஆயிரக் கணக்கான பேர்கள் சிறை சென்ற தியாகமும் ஆயிரக்கணக்காக அடி வாங்கிய தியாகிகளின் தியாகமும் தமிழ் நாட்டின் ஸ்ரீமதி பரமாவதி ஆஷர் ஸ்ரீமதி லெக்ஷிமி அம்மாள் இவர்கள் போன்றவர்கள் கொடிக்காக செய்த தியாகமும் இன்றைய தினம் சமாதானத்தில் ஆங்கிலேயரை இருக்கச் செய்து பறக்கிறதென்றும் இனியும் அரும் தியாகங்கள் செய்து சுதந்திர இந்தியாவில் இக்கொடி பறக்க நாமெல்லோரும் செய்ய வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார். ௬-மணிக்கு இந்நகர் அரண்மனை வாசலுக்கு முன்பாக சுமார் ௩000 பேர்களுக்கு மேல் கூடிய பொதுக் கூட்டத்தில் என். எம். நாராயண அய்யங்காரவர்கள் அக்கிராசனம் வகித்தார்கள் அக்கிராசனரவர்கள் ஸ்ரீமான் பக்தவச்சலம் அவர்களை சபையோருக்கு அறிமுகப்படுத்தி பேசும்படியாக கேட்டுக் கொண்டார்கள். ஸ்ரீமான் பக்தவத்சலம் அவர்கள் காங்கிரஸ் நிர்மாண திட்டங்களைப்பேசி ஜனங்கள் உடனே அனுஷ்டிக்க வேண்டிய மதுவிலக்கில் இந்நகர் அதிக ஒத்தாசை செய்வதற்கு வந்தனம்கூறி மகாத்மா தினங்களில் நம் தலைவர் வல்லபாய் படேல் அவர்கள் கட்டளைப் பிரகாரம் அன்னிய துணி பகிஷ்கார வேலையில் முற்பட வேண்டு மென்றும் அந்நாட்களில் போதுமானபடி கதர் வாங்கவேண்டு மென்றும் வியாபாரிகள் அன்னியத் துணி விற்பதில்லையென்ற உறுதிகூறி சுதேச ஜவுளிகளை விற்க வேண்டுமென்றும் இந்நகர் வியாபாரிகள் தேசாபிமானத்தோடு அதற்கு இணங்குவார்களென்றும் இல்லையேல் பொது ஜனங்கள் ஆதரவில் மறியல் ஆரம்பிக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். பின் ஸ்ரீமான் கிருஷ்ண குந்து அன்னியத்துணி பகிஷ்கார விஷயமாய் பேசினார். ஸ்ரீமான் ஆர். வி. சாமிநாதன் இந்நகரில் ஒரு வாலிபரால் கேட்கப்பட்ட தீண்டாமைப்பற்றிய சந்தேகத்தை விளக்கி ஜவுளி வியாபாரிகள் காந்திவாரத்திற்கு முன்பாகவே ஒரு முடிவு கூறுவார்களென்றும் அம்முடிவு தேசத்திற்கு நல்ல முடிவாய் இருக்கச் செய்ய வியாபாரிகள் முயலவேண்டு மென்றும் கூறினார்.

### கள்ளுக்கடை மறியல்.

சிவகங்கைத் தாலூகாவில் மதுரை ஸ்ரீமான்கள் சிதம்பரபாரதியாரும், மதுரை ஐ. டி. எப். சுந்தரராஜ அய்யங்காரும் சென்ற ஒரு மாத காலமாகப் பலவிடங்களில் கள் சாராயக்கடைகளை மறியல் செய்ய ஆரம்பித்தும், பிரசாரம் செய்தும் வந்தார்கள். அதன்பலனாக ஸ்ரீமான் பரஞ்ஜோதி நாடாரும் அவர் வகை ஆட்களும் ஏலம் எடுத்த கள் கடைகளை டிபாசிட்டுத் தொகையுடன் போகட்டும் என்று விட்டு, புதுக்கடை வைக்கவில்லை. பழைய கள் கடைகள் சுமார் ௩0 வரை மூடப்பட்டுவிட்டது. இன்னும் மற்ற கடைகளும் மறியல் செய்யப்பட்டு மூடிவிடும்படி அன்னாரை கிராம வாசிகளை அடிக்கடி வந்து கூப்பிடுகிறார்கள். மதுரை ஐ. டி. எப். சுந்தரராஜ அய்யங்காருடைய பிரசங்கத்தினால் பொதுஜனங்களிடை மிகுந்த உற்சாகமும் ஊக்கமும் ஏற்பட்டிருக்கிறது.

### பரமக்குடி.

௩-௧0-௩௧-ம் மதுரை ஐ. டி. எப். சுந்தரராஜ அய்யங்கார் நாட்டரசன்கோட்டையிலிருந்து இங்கு ௨ மணிக்கு வந்தார். மாலை ௬ மணிக்கு இவ்வூர் சித்தன் கோவில் முன் ஒரு காங்கிரஸ் பொதுக்கூட்டம் நடைபெற்றது. ஸ்ரீமான் கோட்டைச்சாமி தேவர் அக்கிராசனம் வகித்து ஸ்ரீமான் துரைசாமி அய்யங்கார் கள் கடை மறியல் விஷயமாகப் பேசினார். பின் மதுரை ஐ. டி. எப். சுந்தரராஜ அய்யங்கார் "தற்கால ராஜீய நிலை" "சுயராஜ்யமென்றால் என்ன" "அது வந்தால் ஏழை மக்கள் அடையும் பலன்" என்ற விஷயமாக இரண்டு மணி நேரம் பேசினார். பின் அக்கிராசனர் முடிவுரையுடன் கூட்டம் இனிதாக முடிந்தது. இன்று வக்கீல் ஸ்ரீமான் கோபாலராமய்யர் தலைமையில் தொண்டர்கள் கள் கடை மறியலுக்குச் சென்றார்கள். பழைய கடைகள் மூடிக்கிடந்தன. புதிய கடையைத் தேடிப் பார்த்தார்கள். புதுக்கடை, புதுக்குத்தகைதார், புதுக்கள் இவைகளைக் காணோம். பழைய கடைகளில் கொஞ்சநேரம் இருந்து பார்த்துவிட்டு ஒன்றுமில்லாததினால் திரும்பி விட்டார்கள். அயல் ஊர்களிலிருந்து தொண்டர்கள் உதவிபோ வந்திருக்கிறார்கள். உள்ளூரில் கள் கடை இல்லாவிட்டால் உள்ளூரில் அந்நியத்துணி மறியலாவது அல்லது பக்கத்து கிராமங்களிலுள்ள கள்ளுக்கடைகளையாவது மறியல் செய்வதெனக் காங்கிரஸ்காரர்கள் முடிவு செய்திருக்கிறார்கள்.

### நாட்டரசன்கோட்டை

௧௯௩௧-ம் வருடம் செப்டம்பர் மாதம் ௨௫-ம் தேதி காலை ௯-மணிக்கு தொண்டர்கள் கூட்டம் மதுரை ஐ. டி. எப். சுந்தரராஜ அய்யங்கார் தலைமையில் கூடித் தீர்மானித்ததாவது:—

(௧) வெ. கோட்டைச்சாமித் தேவரவர்களை தொண்டர் படைத் தலைவராக இருக்கும்படி ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

(௨) ரா. கோபால் நாயுடு அவர்களைத் தொண்டர்படை உபதலைவராக ஏக மனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறது.

(௩) எல்லாத் தொண்டர்கள் காங்கிரஸ் தொண்டர் படை உறுதிமொழிப் பத்திரத்தை வாசித்து அதன் பிரகாரம் நடப்பதாக ஒப்புக்கொள்ளப்பட்டது.

௨௯-௯-௩௧-ம் தேதி முதல் மதுரை ஐ. டி. எப். சுந்தரராஜ அய்யங்கார் மேல்ப்பார்வையிலும் தொண்டர் படைத் தலைவர் வெ. கோட்டைச்சாமித் தேவர் தலைமையிலும் அரு. ச. அ. இராமய்யா செட்டியார், ௧ண. வெ. வெள்ளையப்ப செட்டியார், ரெங்களுதன் செட்டியார் இன்னும் சிலர் உதவியாலும் காந்தி-இர்வின் ஒப்பந்தப் பிரகாரம் கள் சாராயக்கடை மறியல் நடந்து வருகிறது. பஜனையும் அரிசி உண்டியல் வசூல்களும் செய்யப்படுகின்றன. கள்சாராய வியாபாரம் கிடையாது. தங்களூரில் வேலை இல்லாததினால் பிற ஊர்களாகிய காளையார் கோவில் அல்லூர் முதலிய இடங்களுக்கும் சென்று மறியல் செய்து ஆரம்பித்து வைத்தும் வருகிறார்கள். இவ்வூரிலும் மற்ற இடங்களிலும் புது உணர்ச்சி ஏற்பட்டிருக்கிறது.

| | |
|---|---|
| ௨௬-௯-௩௧௨ முதல் ௨-௧0-௩௧ தேதி வரை அரிசி வரவு படி | 76½ |
| நாளது தேதி வரை செலவு படி | 38½ |
| பாக்கி இருப்பு | 28½ |

| | |
|---|---|
| ௨௬-௯-௩௧௨ முதல் ௨-௧0-௩௧ தேதி வரை உண்டியல் டொனேசன் உள்பட வரவு | 118—4—0 |
| நாளது தேதி வரை செலவு | 58—6—0 |
| பாக்கி இருப்பு ரூ. | 59—14—0 |
| பொக்கிஷதார் வெ. ௧ண. வெ. வெள்ளையப்ப செட்டியார் வசம் இருப்பு ரூ. | 55—0—0 |
| பெட்டி இருப்பு | 4—14—0 |
| மொத்தம் | 59—14—0 |

### பாகனேரி கள்ளுக்கடை மறியல்.

பாகனேரிக் கள்ளுக்கடை மூடப்பட்ட பிறகு, பாகனேரித் தொண்டர்கள் எல்லோரும் சமார் ௩ மைல் தூரத்திலுள்ள கோவினிப்பட்டி கள்ளுக்கடையை மறியல் செய்து வருகிறார்கள். ஒவ்வொரு தினமும் காலை ௭0 மணிக்குச் சென்று இரவு ௯ மணிக்குத் திரும்பி வருகிறார்கள். நல. ந. லெ. காசிச் செட்டியார் என்ற அவயதுள்ள சிறு பையனும் தொண்டராகச் சேர்ந்து ஒவ்வொரு நாளும் நடந்து ௬மைல் போய் வருகிறான். மறியல் ஆரம்பித்த தினத்திலிருந்து ஒருவரும் குடிக்க வருவதில்லை. பாகனேரிவாசிகள் ௩ பேர்கள் தான் குடிக்க வருகிறார்கள். தொண்டர்கள் எவ்வளவோ சொல்லியும் கேளாமல் குடித்துக்கொண்டே தொண்டர்களைத் திட்டினார்கள். தொண்டர்கள் சாத்விகமாக நடந்து கொண்டார்கள். மேலும் குடிக்க வந்த நாலு வயலர்கள் வைத்திருந்த ஒரு ரூபாயை வாங்கிக்கொண்டு அவர்களை கடைக்கு அழைத்து வந்தார்கள். தொண்டர்கள் அவர்களைக் கும்பிடவே மூன்றுபேர் திரும்பிவிட்டார்கள். ஒருவன் மட்டும் உள் சென்றான். அப்போது தொண்டர்கள் காலில் விழுந்து கும்பிட்டார்கள். உடனே மேல்கண்டவர்கள் ஓடி வந்து தொண்டர் படைத் தலைவர் ஸ்ரீமான் மு. அழ. ராமசாமி அம்பலத்தையும், உபதலைவர் ஸ்ரீமான பழ. கு. பழனியப்பாவையும் ஒவ்வொரு குத்து குத்தி விட்டு அவனையும் இழுத்துக்கொண்டு போய் எல்லோரும் குடித்தார்கள். தொண்டர்கள் வந்தேமாதரம் என்று சொல்லிவிட்டு அமைதியாக நடந்துகொண்டார்கள்.

மறுநாளும் மேல்கண்டவர்கள் தவிர வேறு ஒருவரும் குடிக்க வரவில்லை. மழை பெய்தது. தொண்டர்கள் நனைவதைப் பார்த்து கடைக்காரர் நல்லின் நாடார் கடைக்குள் வரும்படி அழைத்தார். தொண்டர்கள் மறுக்கவே வெளியில் வந்து மழையில் நனைந்தார். தொண்டர்கள் இவ்விதம் மழையிலும் நனைந்து மறியல் செய்யவே கடைக்காரர் தெரியாமல் ஏலம் எடுத்துவிட்டேன், நீங்களெல்லாம் இப்படிக் கஷ்டப்படுகிறீர்களே என்று கண்ணீர் விட்டு அழுதார். மறியல் ஒழுங்காக நடைபெறுகிறது.

குடிப்பவர்களின் வீடுகளுக்குச் சில தொண்டர்கள் சென்று பெண்களிடம் அவர்கள் வீட்டு ஆடவர்களைக் குடிப்பதினின்றும் தடுக்கும்படி கேட்டுக்கொண்டார்கள். ஒரு பெண்மணி தன் கணவன் குடிப்பதால் ஏற்படும் துன்பத்தைச் சொல்லி அழுதுவிட்டார்கள். தாங்களும் மறியல் செய்ய வருவதாகவும் சொன்னார்கள். குடியை ஒழிக்கப் பாடுபடும் மகாத்மாவையும், தொண்டர்களையும் வாழ்த்தினார்கள்.

சாராயக்கடை மறியல் வழக்கம் போல் நடைபெற்று வருகிறது. இன்றிரவு ஏழு மணிக்கு இவ்வூர் நாட்டார்கள் கூடி ஸ்ரீமான்கள் ஆர். வி. சாமிநாதன்- பழ. கு. பழனியப்பா, மு. அழ. ராமசாமி அம்பலம், அழ. வேலுச்சாமித் தேவர், சுப. முத்திருளப்பா முதலியோர்களை அழைத்து ஊர் பொதுக்காக கடைக்காரர்களிடம் பணம் வாங்கி விட்டதாகவும் அடுத்த வருஷம் முதல் கடையை எடுக்க விடுகிறோமென்றும், ஆகையால் மறியலை நிறுத்த வேண்டுமென்று சொன்னார்கள். காங்கிரஸ்காரர் அதற்கு இணங்கவில்லை. மேல்கண்டவர்கள் கூட்டத்திலிருந்து நேராக சாராயக்கடை சென்று இரவு ௯ மணி முதல் ௧௧ மணி வரை மறியல் செய்தார்கள். இரண்டு பேர் தவிர வேறு ஒருவரும் குடிக்க வரவில்லை

### ஸ்ரீ முருகானந்த தர்மவைத்தியசாலைத் திறப்புவிழா.

ஸ்ரீமான் மெ. வ. வள்ளியப்ப செட்டியார் அவர்கள் கட்டிடத்தில் பிரசோற்பத்தி ஆண்டு புரட்டாசித் திங்கள் ௧௨-ம் நாள் சோமவாரத்தன்று திருவாவடுதுறை ஆதீனத்து மஹா சந்நிதானமாகிய ௨௧-வது பட்டம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகஸ்வாமி அவர்கள் ஏபளத்திரும் நகரக் கல்விச்சாலை ஆசிரியருமான ஸ்ரீலஸ்ரீ சிவசுப்பிரமணிய தேசிகர் அவர்கள் தலைமையில் சென்னைத் தென்னிந்திய செங்குந்த மஹாஜன சங்கப் பிரசாரகரும் அரும்பெரும் சைவபுராணிகருமான உயர் சைவத் திருவாளர் தி. அ. சண்முக முதலியார் அவர்களால் ஷை தர்மவைத்தியசாலையைத் திறந்துவைத்து முருகன் பெருமை ஆயுள்வேதம் வள்ளித் திருமணம் என்னும் விடயங்களை அன்பரிதயம் மகிழ அரும்பெரும் சொற்பொழிவாற்றிய பின்னர் தலைவர் அவர்கள் ஷை விடயங்களின் பெருமை நாட்டின் நிலை சீர்திருத்தம் கல்விக்கடல் சைவசமயம் என்பது பற்றி அநேக உதாரணங்களுடன் முடிவுரை ஆற்றியபின் தலைவர் அவர்களால் திரு. தி. அ. சண்முக முதலியார் அவர்களுக்கு வெள்ளி விநாயகரையும் ஷை தர்ம வைத்தியசாலை அதிபரால் வெள்ளிப்பணி செய்த விபூதி மடலும் சென்னைத் தென்னிந்திய செங்குந்த மஹாஜன சங்கத்துக்கு ஷை தர்ம வைத்தியசாலை அதிபராகிய எஸ். பி. வி. பி. வாலசுப்பிரமணிய முதலியார் ரூ. ௨-ம் சி. த. நடராஜ முதலியார் ரூ. ௧-ம் சீ. ராமாமிர்த பத்தர் ரூ. ௨-ம் செங்குந்த வாசகசாலை ஆசிரியர் கே. கோவிந்தநாயர் ரூ. ௧-ம் நன்கொடை வழங்கப்பெற்று தலைவர் அவர்கட்கும் ஷை தர்மவைத்திய சாலையைத் திறந்து வைத்த பெரியாருக்கும் கதர்மாலை புட்ப மாலை சூட்டப்பெற்று புகைப்படம் எடுத்து நகரக் கல்விச்சாலை மாணவிகள் தேவாரம் திருப்புகழ் வள்ளி திருமணக்கும்மி முதலான வாழ்த்துப்பாக்கள் பாடி விபூதி பிரசாதம் முதலியன வழங்கப்பெற்று சபை நிறைவெய்தியன ஒரு நிருபர் எழுதுகிறார்.







# செல்வநெருக்கடிக் காரணம்.

## ஜயசீலர்கள் மீது குற்றப்பத்திரிகை.

## நெருக்கடியைச் சமாளிக்கும் வழிகள்.

பிரிட்டிஷ் சர்க்கார் தங்கமதிப்பை ஆதாரமாகக் கொண்ட நாணயச்செலாவணியை ரத்துச் செய்ததால், உலகமெங்கும் வியாபாரத் துறையின் நாணய மாற்றில் பெருத்த நெருக்கடி ஏற்பட்டிருப்பதாக ஓர் தலையங்கத்தில் கூறும் "பம்பாய்க் கிரானிக்கிள்" பத்திரிகை, பிரிட்டனின் பொருளாதாரக் கஷ்டத்தை இதனால் நிவர்த்திக்க முடியாது என்று அபிப்பிராயப்படுகிறது. அது கூறுவதாவது:—

இதனால் ஒழுங்குப் படுத்தப்பட்டுள்ள பொன்—வெள்ளி—இதர வஸ்துக்கள் ஆகியவற்றின் விலை மதிப்பு ஒரு நிர்ணயம் செய்யப்பட்ட இன மாற்றலிலிருந்து வாங்குவோர்—கொடுப்போர் இஷ்டத்தைப் பொருந்தியதாய் விட்டது. கேவலம் பண்டமாற்றல் போல் ஆகிவிட்டது. இதனால் வெகு வேகமாகவே, ஏராளமான ஏற்ற குறைவுகளுக்கு இடம் உண்டாகிவிட்டது.

இதனால் பிரிட்டிஷ் செலாவணி நாடக ஆட்டம்போல் வெகு ஆச்சரியமாக முறிந்து போய்விட்டது. ரொக்கம், பங்குகள், இருப்புகள் முதலான சாதாரண பணப் புழக்கத் தொழில்களைக்கூட வலுவில் மூடிவிட வேண்டியதாகி விட்டது.

உலகெலாம் பாதிக்கும் முக்கியமான இந்த நெருக்கடி அரசியல் துறையிலும் செல்வத்துறையிலும், வெகு முக்கியமான கருத்துகள் நிரம்பப் பெற்றுள்ளது. இந்த நெருக்கடியின் பூர்வோத்திரங்களின் உண்மையை நன்கு தெரிந்துகொள்ள இந்த நிலைமை ஏற்படுவதற்குக் காரணமாயுள்ள அம்சங்களில் நாம் கவனம் செலுத்தி ஊன்றிப் பார்க்கவேண்டியது அவசியமே.

### அமெரிக்காவுக்கே லாபம்.

உலக மகா யுத்தத்திற்கு முன் லண்டன் நகரமே உலக மார்க்கெட்டுகளுக்கெல்லாம் முக்கியமான ரொக்க லேவாதேவி மார்க்கெட்டாக இருந்துவந்தது. இதனால் பிரிட்டிஷ் ஜனங்களுக்கு ஏராளமாகப் பெருந்தொகையான பணங்கள் நல்ல வருமானமாக வந்துகொண்டிருந்தன. ஆனால் யுத்தம் முடிந்த பிறகு, உலகத்துக்குள் அமெரிக்காதான் வெகு முக்கியமான பெரிய கடன் கொடுக்கும் நாடாக ஆகிவிட்டது. அதனால் அது உலகத்தின் சர்வதேசச் செல்வ நிலையில் தன் பேச்சே முதன்மையாக நின்று, பிரபல ஆதிக்கம் பெற முயற்சித்துக்கொண்டுவருகிறது. அமெரிக்கப் பெரும் பணக்காரர்களின் சுயநலம் பிடித்த அக்கரை என்னவென்றால், பிரிட்டிஷ் செலாவணியை எவ்வளவு தூரம் விலை குறைக்க முடியுமோ அவ்வளவு தூரம் குறைத்து விடவேண்டு மென்பதே. இந்த தன்னலப் பெருக்க முயற்சியில் அமெரிக்கர்கள் நல்ல ஜயம் அடைந்து விட்டார்கள். தங்கச் செலாவணியின் நோக்கங்களும் உத்தேசங்களும் தோற்கடிக்கப்பட்டு விட்டன.

இதனால் உலகத்தில் கணக்கில்லாத ஏழைமக்கள் பிழைக்கும் வழிக்குத் தொழில் தேடிக்கொள்ளும்படி தெருவில் விடப்பட்டு விட்டனர். இதற்கு அனுகுணமாகவே இவர்களை வேலைக்கு அமர்த்திக் கொள்ளக்கூடிய பெரும் பணம் படைத்தவர்கள் வெகு சிலரேயாவார்கள்.

### இருப்பு இல்லாத் தலைவர்களின் இடர்.

இப்போது ஏற்பட்டிருக்கும் பொருளாதார நெருக்கடி நிலைமையானது (சாமான்களை) உலகத்தின் கொள்வினை கொடுப்பினைகளில் கொள்வோர்களின் அளவை மெத்தக் குறைத்து விட்டது. இதன் பயனாக எங்கும் பசிவாட்டம் "இருப்பு இல்லாதவர்களிடம்" தாண்டாவமாடுகிறதனால் அவர்களுக்குள் விசேஷமான பெரிய விழிப்பின் எழுச்சி உண்டாகியிருக்கிறது. இவ்விதம் பட்டினியாலுண்டான விழிப்பு முக்கியமாக இந்தியாவிலும் சீனாவிலும் உண்டாகியிருக்கிறது.

ஐரோப்பாவிலுள்ள அநேக தேசங்கள் தங்கள் வரவுசெலவுத் திட்டங்களை ச்சரிசெய்து வைத்துக்கொள்ளத் தவறிப் போய்விட்டன. அதனால் தங்கள் நாணயச்செலாவணியை ஸ்திரப்படுத்தி வைத்துக்கொள்ள முடியாமல் தவிக்கின்றன. அதி சமீபத்தில் சில வாரங்களுக்குமுன் ஜெர்மனியில் ஒரு பெருத்த நெருக்கடி ஏற்பட்டது. இப்போது கிரேட் பிரிட்டன் நெருக்கடியை அனுபவித்து வருகிறது. இதற்குக் காரணம் என்னவென்றால், கையிருப்பில் போதுமான பொன் சேகரித்து வைத்துக்கொள்ளாமல் செயற்கையான (நோட்டுகள் முதலானவைகள் மூலம்) ஒரு தங்கச் செலாவணியை ஏற்படுத்தி அதை நிலைநிறுத்தி வைத்துக்கொள்ளப் பெரும்பாடு பட்டதன் பயனாகவே இந்தத் தங்க செலாவணி நெருக்கடி கிரேட் பிரிட்டனில் சம்பவித்து விட்டது.

தொழில் சர்க்கார் இந்த உக்கிரவாதமான கடமையை நிறைவேற்றி நடத்திவரத் தங்களால் முடியாதென்ற தங்கள் அசக்தியை நன்கு அறிந்துகொண்டு, ராஜிநாமா கொடுத்து விட்டார்கள். அதன் பிறகு "புதிய தேசீய சர்க்கார்" ஏற்பாடுபட்டாவது, கிரேட் பிரிட்டனின் செல்வ நிலைமையை ஸ்திரப்படுத்தி நிலைநிறுத்த வேண்டுமென்ற மன உறுதியுடன் ஆட்சியைத் தைரியமாக ஏற்றுக்கொண்டார்கள்.

### சர்க்கார் நிபுணர் முடிவுகள்.

பிரிட்டனின் செல்வ நிலையைப் பரிசீலனை செய்யத் தொழில் கட்சி சர்க்கார் நிபுணர்களின் கமிட்டியொன்றை ஏற்படுத்தினார்கள். அவர்கள் நிலைமையை நன்கு பரிசீலனை செய்து ஒரு கண்டிப்பான முடிவுக்கு வந்தார்கள். அதாவது, இப்பொழுது இருப்பது போலவே கையைவிட்டு நழுவி அடித்துக்கொண்டே போகும் முறையில் காரியங்கள் நடந்துகொண்டேவந்தால் அடுத்த வருஷம் வரவு செலவுத் திட்டத்தில் ௧௨ கோடி பவுன் துண்டு விழும் என்ற முடிவுக்கு அவர்கள் வந்தார்கள். இந்தத் துண்டுத் தொகையை நிர்ணயிப்பதற்கு அவர்களுக்கு என்ன நியாயமோ ஆதாரமோ இருந்த போதினுங்கூட அவைகளெல்லாம் ஒருபுறம் இருக்கட்டும்.

இந்தச் செய்தி உலகெங்கும் பிரிட்டனின் பேரில் சந்தேகத்தைக் கிளப்பிவிட்டது. வெளிநாடுகள் தங்கள் வைப்புத் தொகைகளை லண்டனிலிருந்து வாபீசு வாங்க ஆரம்பித்தன. தொழில் கட்சி சர்க்கார் ராஜிநாமா செய்வதற்குள்ளேயே இவற்றைச் சமாளிக்கத் தனியாக விசேஷ முறைகள் கையாளப்பட்டு இருந்தும் அதனால் எவ்வளவு மட்டும் சாத்தியமோ அவ்வளவு மட்டில் வைப்புத் தொகைகள் வாபீசு கொடுக்கப்பட்டன. தொழில்கட்சி சர்க்கார் தங்கள் வரவு செலவுத் திட்டங்களில் துண்டு விழுவதைச் சரிசெய்துகொள்ளத் தவறிப் போய்விட்டனர். இது உலகத்தில் பிரிட்டிஷ் நாணயத்தின் நம்பிக்கையைக்கெடுத்து நாசமாக்கிவிட்டது. அதனால் இரண்டு சங்கடங்கள் உண்டாகி விட்டன. ஒன்று மெத்த மும்முரமான சிக்கனம்; மற்றொன்று நாணயக்கேடு. இந்த இரண்டில் எதை ஏற்பது என்ற சங்கட நிலைமை உண்டாகி விட்டது. இந்தச் சந்தர்ப்பங்களெல்லாம் சேர்ந்ததால் பலாத்காரமாய்த் தங்கத் திட்டச் செலாவணியை நிறுத்திவிடச் செய்தன பழைய வரிகளுடன் பிரிட்டிஷ் செல்வ நெருக்கடியைச் சமாளித்து வரவைப் பெருக்குவதற்காக அநேகம் புதிய வரிகளை விதிக்க உத்தேசித்துப் பல புதிய மசோதாக்கள் இப்போது கொண்டுவரப்பட்டிருக்கின்றன.

### உலக சமாளிப்புக்கு வழி.

இந்தச்சந்தர்ப்பத்தில் ஸர் ஜார்ஜ்பீஷ் என்பவர் எழுதியிருக்கும் "உலக சமாளிப்புக்கு வழி" எனும் புத்தகத்தில் கூறியுள்ள எச்சரிக்கையை ஒவ்வொருவரும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது அவசியம். அப்படிச் செய்தால் அதுவே மெத்த நலம்.

உலகப் பொருளாதார நெருக்கடி இப்போது இருப்பதைக் காட்டிலும், வருஷ முடிவில் இன்னும் அதிகப் பிரமாதமாய்க் கடுமையாயிருக்கும். இதற்குள் எல்லாத் தேசத்திய கதிகளையும் ஒன்றுசேர்த்து நெடுநாளைக்கு நிலைத்து நிற்கும்படியான சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டியதே மெத்த அவசரமான வேலை. இதில் தவணைப் பாக்கி செலுத்த வாய்தாக்கொடுப்பது, வட்டி செலுத்துவது முதலியன ஒன்றுக்கொன்று பிணைக்கப்பட்டுள்ள கடன் வகையறாக்களையெல்லாம் ரத்துசெய்து விடுவதையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் சர்வதேச வியாபாரத்தின் பேரில் உலகெங்கும் வைத்துள்ள நிர்ப்பந்தங்களை யப்புறப்படுத்தி விடவேண்டும் என்றும் அவர் கூறியுள்ளார்.

### ஜயசீலர்மீது குற்றப்பத்திரிகை.

உலக மகாயுத்தத்தில் வெற்றிபெற்ற "ஜயசீலர்கள்" தங்களுக்குச் சேரவே

(அடுத்த பக்கம் ௩-ம் பத்தி பார்க்க)

## ஓர் விசித்திரக் — — — — கொள்ளை.

### புருவின் அதிசயத் தூது.

வடபோலத்து நீதிபதி ஹாசல்டனின் மகன் ஒரு வாரமாகக் காணாமல் போய்விட்டான். அச்சமயத்தில், அவ் வாலிபனை விடுதலை செய்ய ௫000 பொன் விடுதலைப் பணமாகக் கொடுத்தனுப்பினால் உடனே அனுப்பப்படுவானெனவும் இல்லாவிட்டால் அவன் கொல்லப்படுவானெனவும் ஓர் பயமுறுத்தல் கடிதம் வந்துசேர்ந்தது. இதில் ஒரு புரு செய்த விசித்திரக் காரியத்தைக் காட்டும் பின்வரும் விவரங்களை "இந்தியா" தந்திருக்கிறது:—

வாலிபன் காணாமல் போய்விட்டவுடன் ஜட்ஜ் இச்சம்பவத்தைப்பற்றிப் போலீசாருக்கு அறிவித்தார். போலீசார் இதைப்பற்றி ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தனர். அச் சமயத்தில் ஓர் கடிதம்ஓர் புருவின்காலில் கட்டப்பட்டு ஜட்ஜிற்கு அனுப்பப்பட்டது. அக்கடிதத்தில் தம் மகன் விடுதலை செய்யப் படவேண்டுமானால் அப் புருவின் காலிலேயே ௫000 பொன் கட்டி அனுப்ப வேண்டுமென்றும் இல்லாவிட்டால் அவர் தம் மகனை உயிருடன் பார்க்க முடியாதென்றும் பயமுறுத்தி எழுதப்பட்டிருந்தது. இவ்விஷயத்தை நீதிபதி உடனே போலீசுக்கு அறிவித்தார். அவர்களுடைய யோசனையின் படி பணமில்லாமல் அப்புருவை மாத்திரம் விட்டுவிட்டனர்.

போலீஸார் ஓர்விமானத்தில் இப்புருவைத் தொடர்ந்து சென்று பின்ஷிங்கிலுள்ள ஓர் வீட்டை அடைந்தனர். ஆனால் அவ்வீட்டுக்காரனை இவ்விஷயமாக விசாரித்ததில் தனக்கு ஒன்றும் தெரியாதென்றும், தன் புருவைப் பச்சை வர்ண மோட்டாரில் வந்த ஓர் வாலிபனுக்கு இரவல் கொடுத்ததாகவும் கூறினர்.

இவ் விஷயமாக நியூயார்க்கிலும், நியூஜெர்சியிலும் விசாரணை செய்து போலீசார் ௫ ஆண்களையும் ஓர் பெண்ணையும் கைதுசெய்தனர். நீதிபதியின் குமாரனுன சார்லஸ் ரோசத்தல் ஓர் நாகனெனத் தெரிகிறது. ஆகஸ்டு மாதம் ௧௯-ம் தேதி மறைந்தான். அடுத்த வாரம் வெள்ளிக்கிழமை மறைந்தவன் தானாகவே போலீஸ் ஸ்டேஷனை அடைந்து தன்னை ஓர் அழகிய வாலிபப் பெண் மயக்கி, நகரிநுள்ள ஓர் வீட்டுக்கழைத்துச் சென்றதாகவும், அங்கு தான் ஒரு வாரமாகச் சிறைப்பட்டிருந்ததாகவும் தெரிவித்தான். இந்த உளவின்மீது போலீசார் எதிரிகளைக் கைது செய்தனர்.

ரோசத்தால் மறைந்ததும், அவன் விடுதலைக்காக ௨௦,000 பொன் தர வேண்டுமென அவனுடைய வயது சென்ற தாயாருக்கும் ஓர் கடிதம் அனுப்பப்பட்டது. அவள் தன் மகன் மீதிருந்த ஆசையால் அதைப்போல் இரண்டுபங்குப்பணம் கொடுத்ததுடன் இன்னும் எவ்வளவு வேண்டுமானாலும் கொடுப்பதாகக் கூறினாளாம். ஆனால், இதனால் பொருள் நஷ்டமாயிற்றே ஒழிய மகன் வந்துசேரவில்லை.

ரோசத்தலும் தன் விடுதலைக்காக ௬0,000 பொன் எதிரிகளுக்குக் கொடுத்திருப்பதாகத் தெரிகிறது. கைது செய்யப்பட்டவர்களின் உடைகளில் மறைத்துவைத்திருந்த ௨௯௯0 பொன் கைப்பற்றப்பட்டது. அதன் பின்னர் ௯௯00 பொன்னும் கைப்பற்றப்பட்டது.

---

## காரைக்குடி பந்து விளையாட்டு

எக்ஸல்ஸியர் பாட்மிண்டன் கிளப் :— பிரஜோற்பத்தி-௵ புரட்டாசி-மீ ௯-உ (25-9-31) காலை நிகழ்ச்சி முறையிற் கண்டபடி ௬-மணிக்கு ஜனப் S. A. K. ரஜ்வி சாகிப் பகதூர் டிப்டி சூப்பிரெண்டெண்ட் அவர்களை டை கிளப்பின் அங்கத்தினர்கள் வாத்திய கோஷங்களுடன் வரவேற்று டை கிளப்பின் தலைவரவர்களால் மாலை அணிவித்து அக்கிராசனராக அமரச் செய்து பைனல் விளையாட்டுக்கு அளகப்பன் அண்பாட்னர் டீமில் சொ. புதூர், பழ. மு. பொன்னழகப்ப செட்டியார்களையும், வேகுபட்டி மெ. மு. சேதுராமன் செட்டியாரவர்களையும் பிரூன்ஸ் டீமில் காரைக்குடி நா. ராம. சித. சிதம்பரஞ் செட்டியாரவர்களையும் ராம. நா. முரு. முருகப்ப செட்டியாரவர்களையும் விளையாடச் செய்வித்தார்கள். அளகப்பன் அன்பார்டனர் டீம் (winners) ஆகவும், பிரூன்ஸ் டீம் (Runners) ஆகவும், விளையாடி மகிழ்ச்சிகரமாக விளையாட்டு முடிவு பெற்றது. திரளான ஜனங்கள் வந்திருந்தார்கள்.

அப்போது தலைவரவர்கள் பேசியதின் சாரம் "வாலிபர்கள்விளையாட்டில் உற்சாகத்துடன் முன் வந்து பரிசு பெறுவது இக்காலத்தில் முக்கியமான கடைமுறையாகும். நான் இன்று பார்த்ததில் இங்கு விளையாடும் நண்பர்களின விளையாட்டின் திறமை சென்னை இராஜதானியில் உள்ள சிறந்த விளையாட்டாளர்களை ஒத்திருந்தன. எனக்கு இத்தகைய விளையாட்டில் அதிகமான ஆர்வம் உண்டு. இந்த டூர்ணமெண்டில் வெற்றி பெற்ற நண்பர்களை நான் மனமார வாழ்த்தி இந்தக் கிளப்பின் சார்பாக (winners) களுக்கு தங்க முலாம் பூசிய இரண்டு வெள்ளிக் கப்புகளும் (Runners) களுக்கு இரண்டு வெள்ளிக் கப்புகளும் பரிசாக வழங்குகிறேன்" என்று சொல்லி பரிசுகளை விளையாட்டாளர்களுக்கு கொடுத்தார்கள். பின்னர் காரைக்குடி V. R. M. செட்டியார் B. A. அவர்கள் பேசியதின் சுருக்கம். தலைவரவர்களே! கனவான்களே! இன்று பைனல்ஸ் விளையாட்டு நமது சூப்பிரெண்டெண்ட் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தலைவரவர்களுக்குப் பல வேலைகளிருந்தும் அவ்வேலைகளை யெல்லாம் பொருட்படுத்தாது நம் வாலிப நண்பர்களை உற்சாகப்படுத்த வேணுமென்று வந்து அரிய சொற் பொழிவால் ஊக்கமளித்து இந்த டூர்ணமெண்டை சிறப்பாக நடத்தி வைத்தது போற்றத் தக்கதாகும். வீண் வேதாந்தம் பேசாமல் நமது வாழ்க்கையில் நமது விளையாட்டை இன்றியமையாத முக்கிய காரணமாக வைத்துக்கொள்ளவேண்டும். அதிற் போட்டி விளையாட்டும் இடையிடையே நடைபெறவேண்டியது மன உற்சாகத்திற்கு ஏதுவாகும்" என்று பேசி முடித்து தலைவரவர்களுக்கும் விளையாட்டாளர்களுக்கும் மாலை யணிவித்தார்கள்.

டை கிளப்பின் சார்பாக நன்றி கூறுமுகத்தான் திரு.கி. முரு. நாராயணஞ்செட்டியாரவர்கள் பேசியதின் சாரம் "கடந்த ஐந்தாண்டுகளுக்கு முன் இந்த ஊரில் நடைபெற்ற பாட்மிண்டன் டூர்ணமெண்டில் இப்பொழுது வெற்றியாளராக வந்திருக்கும் பொன்னழகப்ப செட்டியாரவர்களின் சகோதரர்கள் வெற்றி பெற்று பரிசு பெற்றார்கள். அவர்கள் சகோதரான நமது நண்பர் பொன்னழகப்ப செட்டியார் அவர்களும், வேகுப்பட்டி சேதுராமன செட்டியாரவர்களும் இதே ஊரில் டீ௯, டீமகளில் கலந்து விளையாடி (winners) வெற்றி பெற்றதற்கும் மற்றும் (Runners) சிதம்பரஞ் செட்டியார் முருகப்ப செட்டியார் இந்தக் கிளப்பிற்கு காப்டனாகவும் செக்ரட்டரியாகவும் இருந்து காரியங்களை பொறுமையோடு நடத்தி வைத்து அவர்களும் டீம் கொடுத்துப் போட்டியில் கலந்து ஜெயம் பெற்றதற்கும் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகிறேன். பற்பல ஊர்களிலிருந்தும் தங்கள் வேலைகளைப் பொருட்படுத்தாது இங்கு பல நாட்களாக வந்து சிறப்பித்து வைத்த அன்பர்களுக்கும் இந்தக் கிளப்பின் அங்கத்தினர்களுக்கும் நிர்வாக சபை அங்கத்தினர்களுக்கும் இந்த டூர்ணமெண்டிற்கு பொருளுதவிய கனவான்களுக்கும் மற்றும் பல உதவிகள் செய்த நண்பர்களுக்கும் காரியதரிசியின் சார்பாக நன்றி செலுத்துகிறேன்" என்று சொல்லி முடித்தார்கள். பின்னர் புகைப்படம் எடுக்கப் பெற்று இனிதுநிறைவெய்தியது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

---



---

## செல்வநெருக்கடிக் — — — காரணம்.

(௧௩-ம் பக்கத் தொடர்ச்சி)

ண்டியகடனுக்கு வட்டியும் தவணைப் பாக்கியும் கட்ட வாய்தாக்கொடுக்கும் கொள்கையைத் தாக்கி அதைப் பொடிப்பொடியாகச் சிதற அடிக்கக்கூடிய குற்றப் பத்திரிகை எதுவென்றால் டாக்டர் ஹிஜால்மர் ஷாக்ட் என்பவருடையது தான். இவர் ஜர்மனி நாட்டின் சர்க்கார் பாங்கியான ரீஷ் பாங்கியின் மாஜித் தலைவர்.

அவருடைய வாதம் என்ன வென்றால், இப்போது உலக முழுதும் பரவித் தாண்டவமாடிவரும் பொருளாதார நெருக்கடிக்குக் காரணம் முதலாளிகள் கோஷ்டியினர் கையாடிவரும் தற்கொலைக்குச் சமானமான கொள்கையேயாம். அது மாத்திரமன்றி, உலகத்தின் முக்கியமான தேசங்கள் எல்லாம் சுமக்கமாட்டாதபடி அவ்வளவு அதி பயங்கரமான பளுவாகவுள்ள கடன் சுமைகளுள்ளவைகளாக இருந்துவருவதும் மற்றொரு காரணம். அவர் மெத்தப் பரபரப்பான கலக்கம் உண்டாக்கக் கூடிய ஒரு எச்சரிக்கையுடன் தமது உரையை முடித்திருக்கிறார்.

"உலகத்தொழிலாளர்கள் அனைவருக்கும் வயிற்றுக்குச் சாப்பாடுகூடப் போட முடியாத முதலாளிகளின் ஆதிக்கம் இந்த உலகத்தில் பிழைத்திருப்பதற்கே பாத்தியமில்லை, நியாயமுமில்லை" என்பதே அது.

### பிரிட்டனின் நிலைமை.

பிரிட்டிஷ் சர்க்காருக்குச் செல்வ சம்பந்தமாகத் தங்கள் கட்டளைக் கடமைகளைப் பூர்த்தி செய்ய வேண்டிய பெரும் கஷ்டமான வேலை ஒருபுறம் எதிர்த்து நிற்பது மாத்திரமின்றி மற்றொரு புறம் வேலையில்லாத் திண்டாட்டத்தினால் அல்லல் படுவோர்களுக்கு வேலை சம்பாதித்துக் கொடுக்க வேண்டிய பிரம்மாண்டமான தேவையைச் சமாளிக்கப் பிரமாதமான பெரு முயற்சிகள் செய்ய வேண்டிய கட்டாயமும் இருந்து வருகிறது.

தங்கச் செலாவணியின் முறிவால் ஜீவனச் செலவு ஏற்கெனவே அதிகமாகக் கஷ்டப்படுகிறவர்கள் பிரிட்டனிலுள்ள தொழில் வகுப்பினரேதான்.

ஒரு சமயம் கொஞ்சம் கைத்தொழில்அபிவிருத்தி மறுபடியும் உண்டாகலாம். ஆனால், இப்போதுள்ள பிரமாண்டமான நிலைமையைச் சமாளிக்க அடியோடு அது போதவேபோதாது தான். தேசிய சர்க்கார் இப்போது தற்காலிகமாகச் செய்யஆரம்பித்துள்ள ஏற்பாடுகள் கொஞ்சமும் பயன் படா. அதனால் நாசகாலத்தைக் கொஞ்சம் தள்ளிவைக்க மாத்திரந் தான் முடியும்.

---



மேற்குறித்த தலைப்பின்கீழ், பெர்கூசன் காலேஜ் மாணவர் ஒருவர் பம்பாய் ஆக்டிங் கவர்னரைக்கொல்ல முயன்றதை நான் கண்டித்து எழுதியதை மறுத்து ஓர் நிருபர் நீண்ட கடிதம் ஒன்று எனக்கு எழுதியுள்ளார். அக்கடிதத்தின் சாரத்தை மிகச் சுருக்கிக் கீழேகொடுக்கின்றேன்.

"நவஜீவன் பத்திரிகையின் சென்ற இதழில் தாங்கள் கக்ஷன் (பைத்தியம்) என்ற தலைப்பின்கீழ் எழுதிய குறிப்பைவாசிக்க மனமிகப்புண்பட்டேன். நான் ௧௯௨௨-வது வருடம் முதலே ஓர் அஹிம்சையை மேற்கொண்ட ஒத்துழையாமைக்காரன் என்பது. எவ்வளது சாதிக்கமுடியுமோ அவ்வளவும் காங்கரஸ் கொள்கையாகிய அஹிம்சையைப்பின்பற்றிவருவதோடு, பெண்களைத் துன்புறுத்தல், தேசியக் கொடியை அவமதித்தல் போன்ற அசாதாரண காலங்களில் மட்டுமே அதனை ஓர் தந்திரமாகக் கொண்டு வந்திருக்கின்றேன் என்பதையும் முதன்முதல் அறிவிக்க விரும்புகிறேன். பெரும் மனக் கொதிப்பை உண்டுபண்ணிய காலங்களிலும், இவ்விரண்டிற்கும் அபாயம் நேராவிடின், உண்மை அஹிம்சா முறை சாதிக்கக் கூடியதாக விருக்கலாம். ஆனால் எப்பொழுது பெண்கள் துன்புறுத்தப் படுகின்றார்களோ-தேசியக்கொடி அவமதிக்கப் படுகின்றதோ-அப்பொழுது எனது அஹிம்சா முறையானது மறைந்துவிடுமோ வென்று அஞ்சுகிறேன். அவ்வாறு மறையாதிருப்பின் அது எனது உடலின் பலக் குறைவும், சில விசேஷ காலங்களில் மேற்கொண்ட தன்னடக்கமுமேயாகும். நான் பணிவோடு அறிவித்துக் கொள்ளலாமாயின்—ஷோலாப்பூர் ராணுவச் சட்டத்திற்கு முதன் முதல் சாத்விகச் சட்டமறுப்பு ஆரம்பிக்க ஆலோசனை கூறி பின்னர் சட்ட மீறியதற்காகச் சிறைத்தண்டனை அனுபவித்தவனும் யானே. இவை என்னைப் பற்றிய விஷயம்

"மரண வாயில் சிக்குண்டிருக்கும் ஒருவனைக் குறைகூறித் தள்ளுவது எனது அபிப்பிராயத்தில், பயனில்லாததாகவே தோன்றுகிறது. அவனிடத்து நீம் ஏதாவது காட்டவேண்டுமாயின் அது அவனிடத்து இரக்கங்கொள்ளுவதொன்றுதான். செயலில் பலாத்காரத்தை மேற்கொள்ளுதல் ஓர் பெரும் செயலோ சிறு செயலோ ஆகிவிடாது. ஏனெனில், பொதுஜனப் பாராட்டு அதற்கு எவ்வளவு பெரிதாக விருந்தாலும் வாழ்க்கை அல்லது மரணம் சம்பவிப்பதாக விருப்பதால் வளர்ச்சி பெறாது. அதனை பொதுமக்கள் மிகப் பலமாக வெறுப்பதாலும், அரசாங்கத்தார் கொடிய அடக்கு முறையைக் கையாளுவதாலும், அல்லது இரண்டும் ஒன்று சேர்ந்து தாக்குவதாலும் வந்துவிடாது. இதன் காரணம் அது பெரும் குழப்பமான உணர்ச்சியால் உண்டாகின்றதென்பதே. தூக்கு மேடைக்கு அஞ்சாதவர், பொதுஜன அபிப்பிராயத்திற்கு அஞ்சமாட்டார். சிறந்த குணம் அல்லது தீயகுணம் எதுவகைப்பட்டிருப்பினும் அது தனிப்பட்டதொன்று; அதுமிகக்கடுமையான அடக்கு முறைக்கும் பெண்கள் துன்புறுத்தப்பட்டதற்கும் பின்னரே வெளிப்பட்டுள்ளது. அதனை அடியோடு மாய்த்துவிட வேண்டுமாயின், ஆட்சி செய்வோர் தங்கள் முறையினைத்திருத்திக்கொள்ள வேண்டும். அல்லது அதனை அழித்து விட வேண்டும்.

"நாம் பாபத்திற்குஅஞ்சி தூயவாழ்க்கை நடத்துவதாயின் ஊழிக்காலம் வரை க்ஷேமமாகவும் துன்பப்படாமலுமிருக்கலாம். ஆனால் நமக்கு விரோதமாக பெரும் துரோகம் செய்ததற்கு, மிகக் கொடிய பாபம் செய்தபின்னர் வருந்த என்ன உரிமையிருக்கிறது.'

## "மறுபக்கம்."

(மகாத்மா காந்தி எழுதுவது.)

எல்லா பகிரங்கமான—நேர்மையான, கௌரவம் வாய்ந்த—துரோக மற்ற—பழிக்குப்பழி வாங்கும் வழிகள் யாவற்றையும் அடைத்துவிட்டபின் என்ன உரிமை இருக்கிறது? ஓர் நாட்டின் பொறுமை அது எவ்வளவு பெரிதாக விருப்பினும்—இந்தியாவே ஆயினும்—மௌனமாக அநீதி, மிருகத்தன்மையான கொடுஞ்செயல் போன்ற துன்பங்களை பொறுக்கிருப்பதைச் சார்ந்ததாக விருப்பதில்லை. "சண்டையிலும் காதலிலும் தவறுனதென்பதொன்றுமில்லை" என்பது பொதுவான ஓர் சொல். அது சமத்துவமற்ற இரு கட்சிகளிடையே, பலமான கட்சி கைக்கொள்ளும் விஷயத்தில் கொஞ்சம் அதிகமான உண்மையுடைத்தாகவே இருக்கிறது.

"விருந்தாளியும் விருந்திடுவோரும் என்று சொல்லும் தத்துவத்தைக் கவனியுங்கள். திரு ஹாட்சன் யார் விருந்தாளியாக வந்திருந்தார்? பெர்கசன் காலேஜ் விருந்தாளியா? தலைமை ஆசிரியர், போதகாசிரியர்கள் ஆகியோர் விருந்தினராகக் கலந்தது உண்மை. ஆனால் விருப்பமில்லா மாணவர்கள் விருந்தினராக வரவில்லை. இத்தகைய பெரிய விருந்தினரை அழைக்கு முன்னர் மாணவர்கள் ஆலோசனை கேட்கப்பட்டார்களா? இங்கிலாந்து இளவரசரும் இந்தியா அரசாங்க விருந்தினராக வரவில்லையா? இதே வாதப்படி பார்த்தால் அவர் இந்தியாவின் விருந்தினரே யல்லவா? ஆனால் அவர் எவ்வாறு வரவேற்கப் பட்டார்? ஆதலால் இவ்விஷயத்தில் அசாதாரணமான தன்னடக்கமில்லா குற்றத்திற்காக திரு. கோகேட் பழி சுமத்துவோர்களில் கடைசியாகவே கொள்ளவேண்டும். உண்மையான பொறுப்பு அல்லது பொறுப்பற்ற தன்மை திரு.மகாஜனியைச் சார்ந்தது. உண்மை குற்றவாளி அல்லது குற்றஞ் செய்யத் தூண்டியவர் ஆக்டிங் கவர்னரே யாவர். இவர் நல்ல முறையில் நடந்து கொள்ள யோசனை பெற வேண்டும்.

"ஆக்டிங் கவர்னரின் மனோதிடத்தை நான் மிகவும் பாராட்டுகிறேன். கோகேத் முயற்சி வெற்றி பெறாது போன பின்னர் கவர்னர் மிக அமைதியாக "பையா! இது ஓர் முட்டாள் தனமான செயல்" என்று கூறியதையும் பாராட்டுகிறேன். ஆனால் இந்த இரக்க சித்தமுடையதாக—அன்பு கொண்டதாக—த்தோற்றிய ஆக்டிங் கவர்னரின் தன்மை சிறிது நேரமே இருந்தது. திரு. கோகேட்டை விட்டு விட்டு, அவர் சிறிது நேரமேனும் அதிகமாக கரிசனத்துடன் இவ்வன்பை மேற்கொண்டு, எதுவுமே நடக்காதவாறு இருந்திருந்தால் நாட்டில் பரவியுள்ள புரட்சி இயக்கத்தாரிடையே எத்தகைய அதி ஆச்சரியமான மாற்றத்தைத் தோற்றுவித்திருக்கும்! ஆக்டிங் கவர்னர் எப்பொழுதும் தனது மெய்க்காப்பாளர், ராணுவக் காவலர்கள் ஆகியோரால் பாதுகாக்கப்பட்டு வருகிறார். எனவே, தப்பிக் கவறித் தோன்றும் கோகேட்டுகளின் முட்டாள் செயல்களுக்கு அவர் பயப்படத் தேவையில்லை. இன்னும் காலம் ஆகிவிட வில்லை. நம்பிக்கைக்கே நம்பிக்கை கிடைக்கும். குற்றத்தை மன்னித்தலானது பெரும் பங்கமையையும் கரையச் செய்கின்றது. ஆனால், இந்த மன்னிப்புத் தன்மை பலசாலியிடத்தே தோன்ற வேண்டும். வலிமை குன்றியோர் மன்னிப்புத் தேவையில்லை. இவ்வழியில் வழி காட்ட ஆக்டிங் கவர்னரே சிறந்த—சரியான ஆள். ஆனால் இக்காலத்தின் தோற்றத்தில், நல்லறிவு வெற்றி பெறும் என்று எண்ண சிறிதும் இடமில்லை என்பது நன்கு தெரிகிறது."

இந்த குறிப்பானது ராஜபுதானா கப்பலிலிருந்து எழுதப்பட்டதால், அது எழுதிய மூன்று வாரத்திற்குப் பின்னரே அச்சில் வெளியாகும். ஆனால் இதில் கூறியுள்ள விஷயம், கெட்ட கால வசத்தால், எப்பொழுதுமே புதிதாக விருக்கின்றது. எனவே, இக்குறிப்பு பழமையானது என்று எவரும் கருதமாட்டார்கள். இந்நிருபரிடத்தில், பெரும்பாலான மாணவர்களிடையே தோன்றியுள்ள மனப்பான்மையே இருக்கிறதென்பது மிகவும் அஞ்சத்தக்கது. இம்மனப்பான்மை உண்மைவாய்ப் பட்டதென்று கருதுவதானது அதிலும் மிக அபாயகரமானதும் விஷத்தன்மை பொருந்தியதுமாகும். நிருபர் கூறுகிறவாறு தன்னைச் சுற்றிலுமுள்ள நிலைமையைக் கவனியாது உணர்ச்சியால் தூண்டப் பெற்ற ஓர் இளைஞன் ஓர் காரியத்தைச் செய்து விடுவான் என்று கூறுதல் அனுபவத்திற்கு மாறுபட்டது. அவர்களது ஆபத்துக்கஞ்சா திறந்தும் தன்மையை சந்தேகிப்பதற்கில்லை. ஆனால் அவர்கள் புகழும் இகழ்ச்சியும் கவனியாமலே முற்றும் இறங்கி விடுகிறார்கள் என்பது என்னால் நம்ப முடியாது. அவரது செயல்கள் உலகத்தாரால் ஒன்று போல் கண்டிக்கப்படும் என்று அவர்கள் அறிந்துவிடின் தங்கள் விலையுயர்ந்த வாழ்க்கையை இவ்வாறு எறிந்துவிட மாட்டார்கள். இத்தகைய செயல்களால் நமது வேலைக்கு எத்தகைய பெரும் பாதகம் ஏற்படுகிறதென்பதை உணர்த்த அனைவரின் கடமை இதனை முற்றும் கண்டித்தலேயாகும். ஷோலாப்பூர் ராணுவச் சட்டத்திற்கும் அதன் கீழ் நடைபெற்ற இதர செயல்களுக்கும் ஆக்டிங் கவர்னரே பொறுப்பாளி என்று கொள்ளுதல் சரியன்று. முறை தான் தவறுனது—கண்டிக்கத்தக்கது. காங்கிரஸ் இந்த முக்கிய விஷயத்தை—அதாவது இவ்வரசியல் முறையினை—உணர்ந்து அம்முறையை அடியோடு வீழ்த்த முயற்சிக்கின்றதே தவிர எதுவும் செய்ய உதவியற்ற நிர்வாகிகளை—துன்புறுத்த எண்ணவில்லை. இந்தியாவைப் போன்ற ஓர் பெரிய நாட்டின் பொருளைக் கொள்ளையடிக்கும் ஓர் அரசியல் முறையை நடத்த தேவதூதன் ஒருவனை ஏற்படுத்தினாலும், அந்த தேவனும் எதுவும் செய்ய சக்தியற்று விளிப்பதோடு ஆக்டிங் கவர்னர் நடந்து கொண்டவாறு நடக்கவும் நேரலாம். பத்துத் தலை ராவணன் மனித உருவங்கொண்ட ஓர் அரக்கனல்ல. அதில் ஆட்சி முறையே இராவணன் உருவத்தோடு காட்டப்பட்டிருக்கிறது. அவ்வுருவத்தின் பழைய தலைகள் வெட்டும் தோறும் புதிய தலைகள் தோன்றிக் கொண்டு இருந்தன. எங்கிருந்து இந்த தலைகள் வந்து கொண்டிருக்கின்றன என்ற விஷயம் இராமர் கவனத்திற்கு வந்த பின்னரே, அவருக்கு இராவணனை அடியோடு வீழ்த்த முடிந்தது.

நம்மிடையே எத்தனையோ கொலைகள் நடந்து விட்டன. கொலை செய்யப்பட்ட உத்தியோகஸ்தருக்குப் பதிலாக வேறு ஆள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அரசியல் முறை முன்னிருந்தவாறே மிக மகிழ்ச்சியாக நடந்து கொண்டிருக்கின்றன. ஆனால் இக்குறும்புகள் யாவற்றிற்கும் ஆணிவேராக விருப்பதை எடுத்து விடுவதின் ஒருமுறை வெற்றி பெற்று விட்டோமானால் நம்மிடை ஷோலாப்பூர் போன்ற சம்பவங்களும் தூக்குத் தண்டனைகளும் நடைபெறா. நாட்டிடையே ஏற்பட்டுள்ள தவறுகள் சம்பந்தமாக இளைஞர்கள் உள்ளத்தில் தோன்றியுள்ள கொதிப்பு போன்று எனக்கும் தோன்றுகிறது. நானும் அவர்களைப் போன்று மிக அழுத்தமாகவே கண்டிக்க விரும்புகிறேன். அவர்கள் ஒவ்வொன்றுக்கும் காரணம் கூறி வாதஞ் செய்வதை விடுத்து, தற்பொழுதுள்ள ஆட்சி முறையை ஒழிக்க, காங்கரசோடு ஒத்துழைப்பாராக. இந்நிருபர் போன்று வாதம் புரிவோர் ஒரு விஷயம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள விரும்புகிறேன். அதாவது கொலை புரியும் கொள்கை ஆரம்பத்திலேயே தடுக்காவிடின்—நமது தலைகளைப்பிடித்துவிடும். அதன் கடைசி நிலை ஆரம்பத்திலிருந்ததை விட மிகக் கொடியதாகிவிடும். இம்முறையானது ஓர் புதிய உருவத்தில் தோன்றத்தக்கவாறு உயிர் பெற்றெழுவதால் நேரும் பெரும் ஆபத்திற்கு நாம் ஆளாகவாகாது. இதேமுறையானது வெளுப்பு மனிதர்களுக்குப் பதிலாகக் கறுப்பு மனிதர்களால் ஆளப்படினும் இதனினும் அதிகமாகவில்லாவிடினும் தற்பொழுதுள்ள துன்பங்களுக்கு ஆளாக்கவே செய்யும்.

(யங் இந்தியா)

---

Reg No. M. 1509. (16 Page.) Price 0-1-6. Tel: "Oolian."



SUBSCRIPTIONS: Annual subscription ... Half yearly ... Foreign, Annual ...



# The "Oolian," a Nationalist Weekly.

Editor: Raya. Chockalingan.

Truth Persists — Service Shines

Vol. XII. } Karaikudi—Tuesday. 6th October 1931. } No 3

# உருசிகரத் துணுக்குகள்.

குரங்கிற்கு அறிவுண்டா? அட்லாண்டிக் கடலுக்கு ஆவேசம்! மலைகள் வளர்கின்றனவாம்! இங்கிலாந்துக்கு ஆபத்தா? மண்மாரிகள் ஏற்படுவதன் இரகசியம்.

### மீன் தனியாக வாழுமா?

தண்ணீரில் வாழும் மீன்கள் தனிமையாக வாழ விரும்புவதில்லையாம். இதனை ஆராயும் பொருட்டு திரு. ஜேம்ஸ் ஸ்பூனர் ஓர் முகம்பார்க்கும் கண்ணாடியை தனிமையாக ஒரு மீன் மட்டுமிருந்த தண்ணீருக்குள் வைத்தாராம். கண்ணாடியைக் கண்டவுடன் அதன் பக்கத்தில் மிக சந்தோஷமாக மீன் ஓடிப்போயிற்றாம். கண்ணாடிக்குள்ளிருக்கும் உருவத்தைப் பார்த்து அதன் பக்கத்தில் போக முயன்றதாம். ஆனால், கண்ணாடியில் தோன்றிய மீன் உருவம், உயிருள்ள மீனோடு வந்து விளையாட வராததால் அந்த மீனுக்கு மிகுந்த கோபம். தோன்றியதோடு அங்கும் இங்கும் இலைச்சல் போட்டுக்கொண்டு சுற்றி அலைந்ததாம்.

ஃ ஃ ஃ

### மனிதக் குரங்கின் அறிவு.

மனிதக் குரங்கிற்கு அறிவு இல்லை என்று பலர் சொல்லுகிறார்கள். இது உண்மையா அல்லவா என்று அறியும் பொருட்டு ஓர் சயன்ஸ் நிபுணர் வாழைப் பழத்தை உயரத்தில் குரங்கிற்கு எட்டாதவாறு தொங்கவிட்டாராம். அதோடு நாலைந்து சிறு பெட்டிகளையும் வைத்து கூண்டினை பூட்டி விட்டாராம். உடனே குரங்கு பெட்டிகளை ஒன்றன்மீது ஒன்றாக அடுக்கி வைத்து அதன்மீது ஏறி கடைசியில் வாழைப் பழத்தை எடுத்துத் தின்றதாம். இதிலிருந்து குரங்கிற்கு அறிவு இருக்கிறதென்பது விளங்குகிறதல்லவா?

ஃ ஃ ஃ

### மண்மாரி எங்கே ஏற்படுகின்றது.

எரிமலைகள் அங்கங்கே திடீரென வெளிப்பட்டுப் பக்கத்திலுள்ள நகரங்களைப் பாழ்படுத்திவிடுகின்றன. பூமியினுள்ளிருந்து கல்லும் மண்ணும் வாரி மலையைச் சுற்றிலுமுள்ள இடங்களில் வீசி எறிகின்றன. இதனையே பண்டைக் காலத்தில் மண்மாரி என்று சொன்னார்கள். வேறு சிலர் மண்மாரி என்பது எரிமலையால் உண்டாவதல்ல; பெரிய பாலைவனங்கள் இருக்கின்றனவல்லவா? அவ்வனங்களில் கொடும் புயற்காற்று உண்டாகும்; இப்புயற்காற்றானது அப்பாலைவனத்திலுள்ள மணலை அள்ளி வாரிக்கொண்டுபோய் பக்கத்திலிருக்கும் ஊரில்போட்டு மூடிவிடும்; இதுதான் மண்மாரி என்பது என்று கூறுகின்றார்கள். நமது புராணங்களில் அரசன் கொடுங்கோல் செலுத்தியபோதும் மக்கள் தீயவாழ்க்கையுட்பட்டபோதும் மண்மாரி பெய்திருப்பதாக எழுதப்பட்டிருக்கிறது. ஆனால், இவை இப்பொழுதும் நமது கண் முன்னே நடைபெறவே செய்கின்றன. எனினும் அவர்களை மண்மாரி அழித்து விடவில்லை. ஆதலால், இவை யாவற்றிலும், எரிமலையால்தான் பெரும்பாலான நகரங்கள் மண்ணுக்குள் மூடப்படுகின்றன என்பதைக் கவனித்துக் கொள்ள வேண்டுவது அவசியமாகும்.

ஃ ஃ ஃ

### எரிமலைகள் உறைவிடம்.

இத்தகைய எரிமலைகள் எங்கே மிகுதியாக விருக்கின்றன? ஜப்பானில் அடிக்கடி எரிமலைகள் நெருப்பும் மண்ணும் வாரி இறைத்து பெரும் நஷ்டம் உண்டுபண்ணுவதாகக் கேட்கிறோம். இவ்வாறே இத்தாலியா நாட்டின் பக்கத்திலுள்ள தீவுகளில் பல எரிமலைகள் இருந்து நாசம் இழைத்து வருவதையும் நாம் கேள்விப்படுகிறோம். இதனைச் சயன்ஸ் நிபுணர்கள் ஆராய்ந்து உலகின் எப்பகுதியில் எரிமலைகள் இருக்கின்றன என்று முடிவு செய்திருக்கிறார்கள். ஆனால், இதுதான் கடைசியான முடிவு என்று எவரும் எண்ண வேண்டாம். இப்பொழுதுள்ள நிலைமையில் எரிமலைகள் அட்லாண்டிக் மகா சமுத்திரத்திலிருந்து நேராக இந்தியாவரையும், இமயமலைக்கும் வடபாகமாகச் சென்று ஆஸ்திரேலியாவின் கிழக்கரையோரமாகச் செல்கின்றதாம். இதில் அமெரிக்காக் கண்டங்களின் மேற்குக் கரைகளும், ஆசியாக் கண்டத்தின் கிழக்கரையும், பாசிபிக் சமுத்திரத்திலுள்ள தீவுகளும் சேர்ந்திருக்கின்றன. இந்த இடங்களில்தான் எரிமலைகள் தோன்றுகின்றனவாம். இங்கேயே பூமி அதிர்ச்சியும் ஏற்படுகின்றது.

ஃ ஃ ஃ

### இங்கிலாந்து அழிந்துவிடுமோ?

சில வாரங்களுக்கு முன் இங்கிலாந்தில் பூமி யதிர்ச்சி யொன்று தோன்றிற்று. இது இங்கிலாந்திலுள்ளார் அனைவரையும் பெரும் திகிலுக்குள்ளாக்கி விட்டதாம். ஏனெனில், பிரிட்டானியர்கள் தங்கள் நாடு பூமியதிர்ச்சி ஏற்படும் கல்லைக்கு வெளியே இருக்கிறது; ஆதலால் பூமியதிர்ச்சியால் தமக்கு எத்தகைய தீங்கும் வாராது என்று எண்ணியிருந்தார்கள். திடீரென பூமியதிர்ச்சி உண்டானதானது அவர்கள் அனைவரையும் தூக்கிப் போட்டுவிட்டது! இங்கிலாந்துக்கு ஆபத்து வரப்போகிறதா என்று திகிலடையச் செய்தது. சயன்ஸ் ஆராய்ச்சியாளர் கூறியது நம்பத்தகாததா வென்று சந்தேகிக்கவும் செய்தது.

ஃ ஃ ஃ

### அட்லாண்டிக் கடலின் ஆவேசம்.

அட்லாண்டிக் கடல் மிக அமைதியான கடல். எந்த வகையில்? பூமியதிர்ச்சியும், கடல் கொந்தளிப்பும் மிகுதியாக வில்லாததால் என்று நம்பப்பட்டு வந்தது. இன்று பல சயன்ஸ் நிபுணர்கள் ஆராய்ச்சி செய்ததன் பயனாக, ஒரு காலத்தில் அட்லாண்டிக் கடலின் உள்ளில் பெரிய எரிமலைகள் இருந்தன அவை சில நூற்றாண்டுகளுக்கு முன் அடங்கிவிட்டன; ஆனால் தற்பொழுது அவை மெதுவாக வெளிக்கிளம்பத் தொடங்குகின்றனவென்று முடிவு கொண்டுள்ளார்கள்.

ஃ ஃ ஃ

### மலைகள் வளருமா?

மலைகள் உயிரில்லாதவை; அவை எவ்வாறு வளரும் என்று கேட்கலாம். பழய புராணங்களைப் பார்த்தால் மலைகளுக்கு இறகுகள் இருந்தனவென்றும் அவற்றால் மலைகள் பறந்து சென்று பல நகரங்களை அழித்தனவென்றும் பின்னர் இந்திரன் தனது வஜ்ராயுதத்தால் அவற்றின் இறகுகளை வெட்டி வீழ்த்தினன் என்றும் தெரிகிறது. இக்காரணத்தால் தான் மலைகள் இருந்த இடம் விட்டுச் செல்லுவதில்லை என்று சொல்லப்படுகிறது. இரண்டு வாரங்களுக்குமுன்னர், உலகிற் பெரிய இமாலய மலை கடலுக்குள்ளிருந்தே வெளித்தோன்றியதென்று ஊழியனில் எழுதியிருந்தோம். அது மலை வளருகிறதென்பதை விளக்குகிறதல்லவா? இன்னும் இங்கிலாந்திலுள்ள மலைகள் மெதுவாக வளர்ந்து கொண்டிருப்பதாக சயன்ஸ் நிபுணர்கள் கூறுகிறார்கள்.

ஃ ஃ ஃ

### கடல்களின் போட்டி!

உலகிலுள்ள ஒரே தன்மையான இரு கடல்கள் அட்லாண்டிக், பாசிபிக் ஆகிய கடல்களாகும். ஒன்று அமெரிக்காவின் கீழ்ப் பக்கத்திலிருக்கிறது. மற்றொன்று மேல்ப் பக்கத்திலிருக்கிறது. இவற்றுள் பசபிக் கடற்கரையில் அடிக்கடி அதிர்ச்சிகள் ஏற்படுவதால் கப்பல்களுக்கு அபாயம் ஏற்படுகின்றது. அத்தகைய அபாயங்கள் அட்லாண்டிக் கடலில் மிகுதியாக ஏற்படுவதில்லை. இதனால் அட்லாண்டிக் கடலும் தனக்குப் பெருமைபெறவேண்டுமென்று ஆசைகொண்டு பசபிக் கடலோடு போட்டிபோடுகிறதாம். இதெப்படித்தெரியுமா? அட்லாண்டிக் கடலின் அடியில் நூற்றுக் கணக்கான மைல்களுக்குக்கீழ் பூமியின் சூடு அதிகரித்துக் கொண்டே வருகிறதென்று இங்கிலாந்தின் நில சம்பந்தமாகப் பெரும் ஆராய்ச்சி செய்து வரும் புரொபசர் பெய்லி வில்லிஸ் கூறுகின்றார். இந்தச் சூடு அதிகரித்துக் கொண்டேவிருப்பதால் இன்னும் பல ஆண்டுகளுக்குப் பின்னர் கடலில் கொந்தளிப்பு அதிகரிப்பதோடு அதிர்ச்சியும் மிகுதியாக உண்டாக இது ஏதுவாக விருக்குமாம்.

ஃ ஃ ஃ

### உயிர்ச்சேதத்தைத் தடுக்க.

பூமி யதிர்ச்சியால் ஏற்படும் உயிர்ச்சேதத்தைத் தடுக்கும் முறைகளைப் பலர் இங்கிலாந்தில் ஆராய்ந்து வருகிறார்கள். பூமியின் உள்ளே அக்னி எப்பொழுது அதிகரிக்கின்றது, எப்பொழுது அது வெளிப்படுவதால் பூமிக்கு அதிர்ச்சி ஏற்படும் என்பதை முன்னரே உணர்ந்துரைப்பதால் உயிர்ச்சேதத்தைத் தடுக்கலாம். தற்பொழுது அவற்றை அறியும் விஷயத்தை ஆராய்ந்து கண்டுபிடித்து விட்டதால் இனி உயிர்களைத் தப்புவிக்க வழியிருப்பதாகச் சொல்லப்படுகிறது.

—

ராய. சொக்கலிங்கனல் காரைக்குடி "ஊழியன்" அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளிப்படுத்தப்பெற்றது.

